உ
ஓம்
பரப்பிரஹ்மணேநம:

# ஆனந்தபோதினி

"எப்பொருள் எத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| | | |
|---|---|---|
| தொகுதி | பிரபவஹு வைகாசிமீ கஉ | பகுதி |
| 12 | 1927ஹு மேமீ 14உ | 11 |

## கடவுள் வணக்கம்.

வேதமுட னாகம புராணமிதி காசமுதல்
வேறுமுள கலைக ளெல்லாம்
மிக்காக வத்துவித துவிதமார்க் கத்தையே
விரிவா யெடுத்து ரைக்கும்
ஓதரிய துவிதமே யத்துவித ஞானத்தை
யுண்டுபண் ணுஞான மாகும்
ஊகமனு பவம்வசன மூன்றுக்கு மொவ்வுமி
துபயவா திகள்சம மதம்
ஆதலி னெனக்கினிச் சரியையா திகள்போது
மியாதொன்று பாவிக்க நான்
அதுவாத லாலுன்னை நானென்று பாவிக்கி
னத்துவித மார்க்க முறலாம்
ஏதுபா வித்திடினு மதுவாகி வந்தருள்செ
யெந்தைநீ குறையு முண்டோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே. (1)

திருந்து சீரடித் தாமரைக் கன்புதான் செய்யப்
பொருந்து நாள்நல்ல புண்ணியஞ் செய்யுநாள் பொருந்தா
திருந்த நாள்வெகு தீவினை யிழைத்தநா ளென்றால்
அருந்த வாவினைப் பொருந்துநா ளெந்நா ளடிமை. (2)

வாழி சோபனம் வாழிநல் லன்பர்கள்
சூழ வந்தருள் தோற்றமுஞ் சோபனம்
ஆழி போலரு ளையன் மவுனததால்
ஏழை யேன்பெற்ற இன்பமுஞ் சோபனம். (3)

# அரும்பொருள் விளக்கம்.

1. ஆன்மாக்கள் இம்மை மறுமைப் பயன்களை இனிது பெறுவதன் பொருட்டு இறைவனை வழிபடவேண்டுவது இன்றியமையாத கடனும். வேதாகம முதலிய நூல்கள் இவ்விஷயமாகப் பல மார்க்கங்களைக் கூறுகின்றன. இவ்வாறு கூறும் மார்க்கங்களனைத்தும் துவிதம், அத்துவிதம், விசிட்டாத்துவிதம் என்னும் மூன்று பெரிய மார்க்கங்களின் பிரிவுகளாக முடிவு பெறும். துவிதம் ஜீவான்மாவையும் பரமான்மாவையும் வேறுபிரித்து இரண்டாகப் பேசும்; அத்துவிதம், ஏகத்வமாதலால் இவ்வுண்மையை உள்ளபடியறிந்தவர், தங்கள் உடல் பொருளாவி மூன்றையும் பரப்பிரமத்துக்கேயர்ப்பணஞ்செய்து, அதன் மயமா யொன்றுதலைப் பேசுவர்; விசிட்டாத்துவிதம் "நானுன்னையன்றி யிலேன் கண்டாய் நாரணனே, நீ யென்னை யன்றியிலை" என்கிறபடி இறைவனுக்கும் ஜீவனுக்கும் உள்ள நெருங்கிய சம்பந்தத்தைப்பற்றிப் பேசும். இவை மேற்சொன்ன முப்பெருமார்க்கங்களின் முடிவான கருத்து. இக் கொள்கைகளை யுடையவர் சுருதி, யுக்தி, அநுபவவாயிலாகத் தத்தமது கொள்கையே சிறந்த தென்பர்.

இங்கு ஆசிரியர், துவித அத்துவிதத்தைப்பற்றிப் பிரஸ்தாபித்து, துவிதமே அத்துவித ஞானத்திற்கு அடிப்படையென்றும், சுருதி யுக்தி அநுபவமும் இவ்விஷயத்தை வலியுறுத்துகின்றனவென்றும், துவிதாத் துவிதத்தில் அடங்கிய கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிஷ்டையாகிய நான்கும் முறையே சரியை கிரியை யோகம் ஞானமென விளங்கலால் சரியையாதிகள் போதும் என்றும், தாம் யாதொரு பொருளைப் பாவிக்கினும் அப்பொருள் மயமே யாய்விடுதலால், இறைவனே! உன்னை நானென்று பாவிக்கின் அத்துவிதஞ் சித்திக்கிறதென்றும், ஆன்மாக்கள் நினைக்கிறபடி நீ அவ்வான்மாக்களுக்கு அவ்வாறே காட்சியருளுவதால், உன்னை நான் எவ்விதமாகப் பாவித்தாலும் நீ அவ்விதம் வந்து அருள் புரிவதில் உனக்கு உண்டாகும் குறையொன்றுமில்லை யென்றும் கூறுகிறார்.

அடியவரின் கருத்தை இறைவன் நிறைவேற்றுவது ஒருதலையாதலால், நாம் அவனையே சரணாகதி யடைதல் வேண்டும் என்பது கருத்து.

2. இறைவன் திருவடியினை மனத்தின்கண் நினைத்த மாத்திரத்தில் அத்திருவடி, ஜீவான்மாவை ஐம்புலன்வழியே செல்லவொட்டாமற் றடுத்து, நல்வினை தீவினைகளின் தொழிலையும் மாற்றி, அதற்கு உண்மையை யறிவிக்கும் தன்மையைத் தருமாதலால் மேன்மைவாய்ந்த அத்திருவடிக் கன்புசெய்யப் பொருந்திய நாளே புண்ணியநாள்; அவ்வாறாகாதநாள் தீவினை செய்யப்பெற்றநாளே. ஆகையால் இறைவனே அடியேன் தேவரீரை யடையுநாள் எந்நாள் என்று கேட்கின்றார்.

3. ஆசிரியர் தாம் வாய் நிரம்பப் பாடிய ஆனந்த மேலீட்டால், இறைவன் தம்மைக்கொண்டு பாடுவித்த அப்பாடல்களும், அடியார்களும், திருவருளும், குருவும், தாமடைந்த இன்பமும் நித்தியமாக வாழவேண்டுமென்று இப்பாடலில் மங்களம் கூறுகின்றார்.

தோற்றம் = திருவருட்காட்சி.

*

---




## பாலிய விவாகம்.

ஓரறிவு முதல் ஆறறிவு ஈறாகவுள்ள உயிர்த்தொகைகள் வாழப் பெற்ற இவ்வுலகத்தில் அத்தொகைகளின் சந்ததி வாழையடி வாழையாகப் பெருகிக்கொண்டுவர, கடவுள் அவற்றுள் ஆணென்றும் பெண்ணென்றும் இரண்டு பிரிவுகளை ஏற்படுத்தி யிருக்கிறார். இந்த ஏற்பாட்டால் இவ்விருவர்க்கங்களுக்குந் தொழிற் பேதங்களும், சுதந்திர பரதந்திரங்களும் உண்டா யிருக்கின்றன.

பகுத்தறிவோடு கூடிய மக்களே அறத்தைச் சரிவர வளர்த்து வருதற் குரியவராவர். அந்த அறம் இல்லறம், துறவறம் என இருவகைப்படும். அவற்றுள் சிறந்தது இல்லறமேயாம்; அதுவே பிரமசரியம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்னும் நிலையிலுள்ளவர்களையும், அனாதரிக்கப்பட்டவர், தரித்திரர், பிதிரர், கடவுளர், அதிதியர், உறவினர் முதலானவர்களையும் அவ்வவர்களுக்கு வேண்டுந் துணைபுரிந்து பாதுகாத்தற்கு யோக்யதை வாய்ந்தது. இந்த யோக்யதைக்கு அத்தியாவசியமாக வேண்டற்பாலது அன்பு. அன்பில்லாவிடின் இல்லறம் ஒழுங்காக நடைபெறாது; பிற உயிர்களின்மீதும் அருள் பிறவாது.

அன்பு முதன்முதலொருவர்க்குத் தமது மனைவி மக்கள் முதலிய தொடர்புடையா ரிடத்தே உண்டாகிப் பிறகு பெருகவேண்டியதா யிருத்தலுடன், இம்மைச் சுகத்திற்கும் மறுமைச் சுகத்திற்கும் காரணமாகவு மிருக்கின்றது. இந்த அன்பிற்கு ஆதாரமான இல்வாழ்க்கை யென்னும் இயல்புடைய வான்சகடமோ,

“ மருவிய காதன் மனையாளுந் தானும்
இருவரும் பூண்டுய்ப்பி னல்லால்—ஒருவரால்
செல்லாது தெற்றிற்று நின்று ”

ஆதலின், வதுவரர்களின் நற்குண நற்செயல்களே இல்லறத்தின் நற்போக்கிற்குப் பீடமாகின்றன. ஆகவே ஆயிரங்காலத்துப் பயிர் என்னும் பெண்மணிகளோடு மனமொத்த வாழ்வில் ஆடவர் பொருந்தி வாழ்வதன் பொருட்டு விவாகச் சடங்கு என்கிற மகோற்சவத்தைத் தக்க விதிகளுடன் நமது பெரியோர்கள் ஏற்படுத்தியிருக்கின்றார்கள்.

விவாகமானது, பிரமம், தெய்வம், ஆருஷம், பிரசாபத்தியம், ஆசுரம், காந்தருவம், இராக்ஷசம், பைசாசம் என்று எட்டுவிதமாகப் பிரிக்கப்பட்டிருந்தாலும், பிரசாபத்தியமே சிறந்ததாகவும் நம்மவரால் கையாளப்பட்டு வருவதாகவு மிருக்கின்றது. பெண்ணின் சுற்றத்தாரும் ஆணின் சுற்றத்தாரும் ஒன்றுகூடி, பிரமசாரியை உபசரித்துக் கன்னிகையை யக்கினிமுன் அவனுக்கு மணம் செய்விப்பது பிரசாபத்தியம் என்று சொல்லப்படும். இது நமது புண்ணிய பூமியாகிய பரதகண்டத்தில் பெரிதும் ஆமோதிக்கப்பட்டு வருகின்றது.

நம் முன்னோரிற் பெரும்பான்மையோர் விவாகத்தை முப்பது வயதடைந்த ஆண்மகனுக்கும் பதினைந்து வயதிற்கு மேற்பட்ட பெண்மகளுக்கும் பொருத்தமுற நடத்திவந்தனர். இக்காலவரையறை வதுவரர் இருவர்க்கும் எல்லாவிஷயங்களிலும் மனமொருமித்த திருப்தியையும், உத்தமமான இல்லறவாழ்க்கையையும், திடகாத்திரமுள்ள புத்திரப்பேற்றையும் தரும் என்பது அன்னோர் துணிபு. நூல்களின் கருத்தும் அன்னதே. ஏனெனில் ஐம்புலன்களாலும் ஏககாலத்தில் அனுபவிக்கவேண்டிய போககாலம் பெண்மக்களுக்கு யௌவனப் பருவத்தில் நீண்டு பிறகு வயதேற வேறக் குறையும் என்றும், ஆண்மக்களுக்கு முதலிற் குறைந்து பிறகு நீளுமென்றும் மதனுகமங் கூறுகின்றது. விஷய இச்சையில் மனதைச் செலுத்தாமல் 30 வயது வரையில் தேகத்தைப் பாதுகாத்துவரும் ஆடவன் இவ்வுண்மையை நன்குணர்வான்.

இப்படியிருக்க நம்மவருட் பெரும்பான்மையோர் முற்றும் தீமை பயக்கக்கூடிய ஆரிய வழக்காகிய பாலிய விவாகத்தை அனுஷ்டித்து வருகின்றனர்.

பாலிய விவாகம் அனேகமாகத் தீங்கையே விளைவிப்பதை நம்மவர் பிரத்தியக்ஷத்திற் கண்டுவந்தும் பலர் அதனை ஆமோதிப்பது

அதிசயமாகவே தோன்றுகிறது; பொம்மைக் கலியாணமென்று இக்கலியாணத்தையும், அவர்கள் நினைத்துக்கொண்டனர்போலும். சகஜமாய் கர்ப்பவதியான நாத்தியொருத்தி கர்ப்பவதியாயுள்ள தன் சகோதரன் மனைவியைப் பார்த்து "அண்ணி! நீயும் கர்ப்பவதி, நானும் கர்ப்பவதி, தெய்வானுகூலமாக நம்மிருவர்க்கும் ஆணும் பெண்ணுமான குழந்தைகள் பிறக்கும் பட்சத்தில் அக்குழந்தைகளுக்கு வேறெங்கும் சம்பந்தந் தேடக்கூடாது. அவைகளே வதுவரர்களாகவேண்டும். அவற்றிற்குச் செவ்வெண்ணெய் வார்க்கும் விஷயத்தில் நீ முந்தினாலுஞ் சரி நான் முந்தினாலும் சரி" என்று உறுதிசெய்துகொண்டு அவ்வாறே குழந்தைகள் பிறந்து ஒன்றிரண்டு வயதானவுடன் விவாகத்தை ஏற்படுத்தி மணப்பந்தலில் இருவரும் குழந்தைகளைத் தங்கள் மடிமீது வைத்துக்கொண்டு அவை அழ அழ அவைகளுக்கு வேடிக்கை காட்டிக்கொண்டே மணவினையை முடித்துவிடுகிறதுண்டு. சிலர் குழந்தைகள் இன்னுங் கொஞ்சம் வயதில் முதிர்ந்தவுடன் விவாகஞ் செய்துவிடுவதுண்டு. இப்படி விவாகம் என்பது இன்னதென்பதைப் பாலர்கள் உள்ளபடி அறிந்துகொள்ளுவதன் முன்பே அச்சிறுவர் சிறுமியர்க்கு மணக்கோலத்தை மிக்க ஆடம்பரமாக நடத்திவிடுவதுண்டு. இத்தன்மையான விவாகம் ஏக தேசத்தில் நலனடைந்தாலும் பெரும்பான்மையில் கெடுதி விளைப்பது கண்கூடு. இவ்விவாகத்தால் விதவைகளாக நேரக்கூடியவர்களுக்கு விதவா விவாகத்தை வற்புறுத்த நம்மவரிற் பலர் முன் வருகின்றனர். இதென்ன வேடிக்கை? யுக்த வயது வரும்வரையில் பொறுத்திருந்து ஏன் நமது மக்களுக்கு விவாகஞ் செய்யக்கூடாது? அதற்குள் முழுகிப்போயது யாது? பாலிய விவாகத்தால் விதவையரான அறிவுள்ள பெண்மணிகளிற் சிலர் புனர் விவாகத்திற்கு இடங்கொடுப்பதில்லை. ஒருமுறை இன்னவர் மனைவியென்றேற்பட்ட ஒரு பாலிய புத்திசாலியான மாதரசி விதவையாய்விடின், அது தன் பெற்றோர் உற்றோரின் தீர்க்காலோசனையின்றிய குறைவால் நேர்ந்ததென்று நினைத்துப் புனர் விவாகத்திற்கு அவர்கள் தன்னை எவ்வளவு தொந்தரவு செய்தாலும் இடங்கொடாமல் அவர்களைநோக்கி "அன்புடையீர்! நான் புனர் விவாகம் செய்துகொள்ளும் பட்சத்தில் இதுவரையில் என்னை இன்னார் பத்தினியென்று அழைத்துவந்தவர் இப்போது இன்னாருக்கு மனைவியாயிருக்கிறாள் என்று சொல்ல நேரிடுவதைச் செவியாரக் கேட்க

என் மனம் சகியாதே. ஏதோ எனது பூர்வ கன்மவசத்தால் பாலியவயதிலேயே என்னை மணஞ் செய்துவைக்க உங்களுக்கு மனம் வந்தது. நானும் விவாக மேம்பாட்டின் உட்பொருளை யுணராமலே உங்கள் மனோரதப்படி அதற்கு ஒத்துக்கொண்டேன்; விதவையாகுங் கதியையும் அடைந்துவிட்டேன். மீண்டுமொரு புருஷனுக்கு மனைவியாயின் அச்சுவையை நான் அறிவதற்குள் திடீரென அப்புருஷனும் இறக்கநேர்ந்தால் மூன்றுந்தரம் மற்றொரு புருஷனுக்கு வாழ்க்கைப்பட இச்சைகொள்ள வேண்டுமல்லவா? முதல் விபத்திலேயே விஷய இச்சையில் வெறுப்பை வளர்க்கப் பழகினால் அது நன்மை பயவாதா? அப்படி அவ் இச்சையை ஒழிக்க ஆற்றலற்றவர்கள் நியாயவழியிலுள்ள.போதும் தீங்கைத் திருட்டுத்தனமாகத் தேடாமற் போவரோ? ஆதலால் இவ்விஷயமாக என்னை வற்புறுத்தவேண்டாம்" என்று சொல்ல அவ்வுத்தமியின் உள்ளமே துணிவுறுதா? இன்னும் இதை விரிக்கிற் பெருகுமாதலின் மற்றொரு சமயம் நேரும்போது கவனிப்பாம்.

வேறு விஷயங்களில் நாம் பிற மதக் கொள்கைகளைக் கவனியாதிருத்தலைப் போலவே இவ்விஷயத்திலும் இருந்து புண்ணிய பூமியாகிய நமது நாட்டில் நம் முன்னோர் கடைப்பிடித்துவந்த ஒழுக்கத்தையே பின்பற்றி இன்புறுவோமாக. "தாய் முலைப்பாலுள் நஞ்சாய்பவர்" நாம் அன்று என்பதை நினைப்போமாக.

சீனதேசத்திலும், ஜப்பான்தேசத்திலும் பாலிய விவாகத்தை நீக்கக் கண்டிப்பான ஏற்பாடுகள் செய்து அங்குள்ளார் அநேக நன்மைகளை அடைந்து வருகின்றார்கள். ஆதலின், சென்ற அக்ஷய௵ மாசி௴ ஆனந்தபோதினி சஞ்சிகை 370, 371, 372-ம் பக்கங்களில் வெளிவந்திருக்கும் வைத்தியக்குறிப்பில் காணப்படும் ஜப்பான் தேச விவாக விதியையும், நாளிது பிரபவ௵ சித்திரை௴ சஞ்சிகை 479-ம் பக்கத்தில் "சீனதேசத்தில் பாலிய விவாகத் தடை உத்தரவு" என்னும் தலையங்கத்தின் கீழ் வந்துள்ள விஷயத்தையும் நாம் ஒவ்வொருவரும் பெரிதும் கவனித்து அத்தகைய சீர்திருத்தத்தை நமது நாட்டிலும் அனுஷ்டானத்திற்குக் கொண்டுவர முயலுவோமாக. இறைவன் திருவருளோங்குக.

ஓம் தத் ஸத்.

---

## 13-வது ஆண்டு.

நேயர்களே! இந்தப் பிரபவஞு அடுத்த ஆடிம௴ கஒ (16—7—27) நம் ஆனந்தபோதினிக்கு 13-வது ஆண்டு பிறக்கப்போகிறது. ஆதலின் சந்தா நேயர்கள் ஷை 13-வது ஆண்டின் சந்தாத் தொகையை அடுத்த ஆனிம௴ கஉ (15—6—27) க்குள், மணியார்டர் மூலமாகவோ, நேரிலோ நமக்கு வந்து சேரும்படி அனுப்பிவிடக் கோருகிறோம். பத்திரிகை வேண்டாதவர்கள் ஷை 15—6—27 க்குள் நமக்குக் கார்டின்மூலம் அவ்விவரத்தைத் தெரிவித்துவிடவேண்டும். மேற்கூறியபடி சந்தாத்தொகையை முன்பணமாக அனுப்பிவிடுகிறவர்களுக்கு அடுத்த ஆனி மாத சஞ்சிகையும், 13-வது ஆண்டு சஞ்சிகைகளும் சாதாரண போஸ்டில் அனுப்பப்பட்டுவரும். பத்திரிகை வேண்டாமென்று தெரிவித்தவர்களுக்கு அடுத்த ஆனி மாத சஞ்சிகை மட்டும் சாதாரண போஸ்டில் வந்துவிடும். மேற்கூறியபடி சந்தாத் தொகையை அனுப்பாதவர்களுக்கும், பத்திரிகை தங்களுக்குத் தேவையில்லையென்ற விவரத்தைத் தெரிவிக்காதவர்களுக்கும், அடுத்த 13-வது ஆண்டின் சந்தாவுக்கு அடுத்த ஆனி மாத பத்திரிகை வி.பி.யி லனுப்பப்படும். இவர்கள் தங்களுக்குப் பத்திரிகை வேண்டாமென்ற விவரத்தைத் தெரிவிக்காமலிருப்பதாலும் சந்தாத் தொகையை அனுப்பாமலிருப்பதாலும் பத்திரிகையை வி.பி. யில் பெற்றுக்கொள்ள இஷ்டமுடையவர்களா யிருக்கிறார்களென்றே நாம் நம்பி இவர்களுக்கு வி.பி. யனுப்புவதால் இத்தகைய நண்பர்கள் வி.பி. யைத் திருப்பிவிடாமல் பெற்றுக்கொள்ளும்படி கேட்டுக்கொள்கிறோம். இங்ஙனம் வி.பி. யை ஏற்றுக்கொள்கிறவர்களுக்கும் 13-வது ஆண்டு சஞ்சிகைகள் மாதந்தோறும் வழக்கம்போல் அனுப்பப்பட்டுவரும். வி.பி. யில் 3-அணு அதிகச் செலவும், பத்திரிகைவந்து சேர்வதற்கு வீண்காலதாமதமும் நேர்வதால் பெரும்பாலும் முன்பண மனுப்பிவிடுவதே நலமென்பதை நேயர்கள் கவனிக்கவேண்டும்.

இங்ஙனம் முன்பண மனுப்பாமலும், பத்திரிகை தேவையில்லையென்ற விவரத்தைத் தெரிவிக்காமலும் இருந்துவிட்டு வி.பி. வரும்போதும் அதைப் பெற்றுக்கொள்ளாமல் திருப்பிவிடுகிறவர்களுக்கு முன்சந்தாவுக்குச் சேரவேண்டிய ஆனிம௴ பத்திரிகை சேராமல் திரும்பிவிடுவதோடு, நமக்கும் வீணுகப் போஸ்டேஜ் நஷ்டமுண்டாகிறது. ஆதலால் நண்பர்கள் மேற்கூறிய விஷயங்களைக் கவனித்து நடந்துகொள்ளும்படி வற்புறுத்திக் கூறுகிறோம்.

சந்தாதாரர்களுக்கும், நமக்கும் வீண்கஷ்டமும் நஷ்டமும் உண்டாகாதிருக்கும்பொருட்டே நாம் புதுவருடம் பிறப்பதற்கு இரண்டுமாதங்களுக்கு முந்தியே இவ்விஷயங்களைத் தெரிவிக்கிறோம். இப்படித் தெரிவித்தும், சில நண்பர்கள் இவ்விஷயங்களைக் கவனித்து முன்பண மனுப்பாமலும், பத்திரிகை தேவையில்லையென்ற விவரத்தைத் தெரிவிக்காமலு மிருந்துவிட்டு வி.பி. போகும்போது அதைத் திருப்பி நமக்கு நஷ்டத்தை உண்டாக்கிவிட்டுத் தங்களுக்கு ஆனி மாதம் சஞ்சிகைவந்து சேரவில்லையென்று நம்மீது

குறை கூறுகின்றார்கள். சிலர், இந்த அறிவிப்பைப் பார்த்திருந்தும் பேசாமலிருந்து வி.பி. யைத் திருப்பிவிட்டு, "நாங்கள் பேசாமலிருப்பதே பத்திரிகை தேவையில்லையென்பதற் கறிகுறி; அதைப்பற்றி நாங்கள் அரையணு செலவுசெய்து கார்டின்மூலம் தெரிவிக்கவேண்டியதில்லை; நீங்கள் ஏன் எங்களுக்குக் கார்டு எழுதித் தெரிவித்து எங்கள் சம்மதத்தைக்கேட்டுத் தெரிந்துகொண்டு வி.பி. யனுப்பலாகாது? ஆதலால் நீங்கள் வி.பி. யனுப்பி எங்களுக்கு ஆனிமாதம் சஞ்சிகைசேராமல் திரும்பிவிடும்படி செய்தது நியாயமாகாது" என்று குதர்க்கமான லெட்டர்கள் எழுதுகிறார்கள்.

நண்பர்களே! இதற்றில் நீங்கள் சில விஷயங்களைக் கவனிக்கவேண்டும். இந்த அறிவிப்பை நாங்கள் இரண்டுமாதங்களில் வெளிப்படுத்தியும், முன்பண மனுப்பாமலும், பத்திரிகை தேவையில்லை யென்பதைத் தெரிவிக்காமலு மிருப்பவர்கள் நிச்சயமாக வி. பி. பெற்றுக்கொள்ள இஷ்டமுள்ளவர்களென்றே எங்களால் கருதப்படுகிறார்கள். அவர்கள் ஏதோ அசந்தர்ப்பத்தால் முன்பண மனுப்பமுடியாம விருந்துவிட்டார்கள் என்று கருதியே நாங்கள் அவர்களுக்கு வி.பி. யனுப்புகிறோம். சிலர் குதர்க்கமாய் லெட்டர் எழுதுகிறபடி இவர்களெல்லோரையும் பத்திரிகை வேண்டாதவர்களென்று நாம் எப்படிக் கருதிவிடமுடியும்? இவர்களுள் சிலரே, கவனியாமையாலோ, வீண் குதர்க்க புத்தியாலோ இந்த அறிவிப்பின்படி நடப்பதைவிட்டுப் பத்திரிகை வேண்டாமென்னும் எண்ணத்தை மனதில் வைத்துக்கொண்டிருந்து வி. பி. வந்ததும் திருப்பிவிடக்கூடியவர்களா யிருப்பார்கள். இவர்களை நாம் எப்படிக் கண்டுகொள்ள முடியும்? அப்படித் தெரிந்துகொள்ளவேண்டுமென்றால் முன்பண மனுப்பாத எல்லோருக்குமே கார்டனுப்பி வி.பி. அனுப்பலாமா அனுப்பக்கூடாதா என்ற விவரத்தை ஒவ்வொருவரிடத்தும் கேட்கவேண்டும். சிலர் செய்கையை முன்னிட்டு அதிகப் பணம் செலவிட்டு எல்லோருக்கும் கார்டனுப்ப முடியுமா? பத்திரிகை வேண்டாதவர்கள் சிலரே இருப்பார்கள். அவர்கள் அவ்விவரத்தை அரையணுக் கார்டில் தெரிவித்துவிடுவது சுலபம். அதனுல் இருவகையாருக்கும் தொந்தரவிராது. நாம் எல்லோரிடத்தும் கார்டனுப்பி வி. பி. யனுப்ப அபிப்பிராயம் கேட்பதென்றால் அதிகப் பணச்செலவும் வீண் தொந்தரவு முண்டாகும். இவற்றையெல்லாம் நன்கு ஆராய்ந்து பாராமல் சிலர் குதர்க்கமான லெட்டர் எழுதுவது எவ்வளவு பொருத்தமானதென்பது அறிவுடையார்க்கு விளங்கும்.

ஆதலின், நேயர்கள் இந்த அறிவிப்பின் விஷயங்களைக் கவனித்துச் செய்யுமாறு மிகவும் மீண்டும் வற்புறுத்திக் கூறுகிறோம். பத்திரிகை தேவையில்லாத நண்பர்களும் வீண் குதர்க்கமும், நியாய விரோதமும் செய்வதைவிடுத்து அவ்விவரத்தைக் கார்டின்மூலம் மேற்குறித்த காலத்திற்குள் தயவுடன் தெரிவித்துவிடும்படி கேட்டுக் கொள்கிறோம்.

பினுங், சிங்கப்பூர் முதலிய மலேயா நாடுகளுக்கு வி.பி. இல்லையாதலின் அங்குள்ள சந்தாதாரர்கள் எல்லோருமே முன்பணம் அனுப்பிவிடவேண்டும்.

முன்பண மனுப்புவோர் பழய சந்தாதாரர்களாயிருந்தால் தங்கள் சந்தா நம்பரைக் குறிப்பிட்டு அடுத்த 13-ஆம் ஆண்டுக்கு என்று எழுதி யனுப்ப வேண்டும். புதிதாய்ச் சேருகிறவர்கள் புதிய ஆண்டுக்கு என்று எழுதவேண் டும். சந்தா நெம்பர் ஒவ்வொருமாதத்திலும் வரும் சஞ்சிகையின் மேல்உறை யில் இருக்கும், அதைத் தெரிந்து எழுதவும். (1190) என்ற ரிஜிஸ்டர் நெம் பருமிருக்கும். அதை யெழுதிவிடாமல் சந்தா நெம்பர் என்று போட்டிருப் பதைப் பார்த்து எழுதவும். சந்தாநெம்பர் தெரியாதவர்கள் முன்பண மனுப்பாமல் வி.பி.யிலேயே சஞ்சிகை பெற்றுக்கொள்வது நலம்.

சஞ்சிகையை நிறுத்திவிட எழுதுவோரும் ஷை சந்தா நெம்பரைக் குறித் தெழுதவேண்டும். ப-ர்.




## தாதாபாய் நௌரோஜி.

(443-ம் பக்கத் தொடர்ச்சி.)

நௌரோஜி சீமைக்குச் சென்றதும் பொது விஷயங்களி லீடுபடும் அவ ரது தன்மையும் அவரைப் பற்றிக்கொண்டே கப்பலேறியது. அவர் இங்கிலாந்திலும் இந்திய தேசசேவை புரிய, இந்தியரின் குறைகளையும் அவர் கள் அரசாங்கத்தாரிடமிருந்து எதிர்பார்க்கும் சீர்திருத்தங்களையும் வெளி யிடும் நோக்கத்துடன் லண்டனில் ஓர் இந்தியசங்கத்தை நிறுவினார். பின்பு, சங்கத்தின் நோக்கங்கள் விசாலமாக, புதிது புதிதான சீர்திருத்தங்களும் முறைகளும் ஞாபகத்திற்குவர, 1867-ம் ஆண்டினிறுதியில் கிழக்கு இந்திய சங்கம் (East Indian Association) ஒன்றை ஸ்தாபித்தார். இச்சங்கத் தின் நோக்கங்களைத் தழுவி ஆசியா விவேசனப் பத்திரிகை (Asiatic Review) என்ற பத்திரிகையும் வெளிவந்தது. இப்பத்திரிகையில் தாதா வரைந்த வியாசங்கள் அனந்தம். இங்கிலாந்தி லக்காலத்திருந்த பல இலக் கிய, தர்க்க, ஆராய்ச்சிக் கழகங்கள் நௌரோஜியின் வியாசங்களையும் ஊக்கத் தையும் கண்டு அவர் உதவியை நாடின. தாதாபாயின் சீமைப்பிரயாண முக் கிய நோக்கம், தாம் ஐரோப்பியர்களுடைய பொது ஸ்தாபனங்களில் அங்கம் பெற்று, அவர்களுடன் நெருங்கிப் பழகி வாழ்ந்து, இந்தியர்களுடைய திறமை யையும் அவர்களுடைய குறைகளையும் எடுத்தோத வேண்டுமென்பதே. நௌரோஜியின் தாய்மொழி குஜராத்தியானதாலும், தாய்மொழியி லபி மானம் வைத்துக் கற்றுத்தேர்ந்தவராதலாலும், சீமையிலுள்ள லண்டன் சர்வகலாசாலை (London University College) யில் அவருக்கு குஜராத்தி

பாஷையைப் போதிக்கும் ஆசிரியர் பதவியை அளித்தனர். இவருடைய புகழ் அதிகரிக்கப் பின்பு கல்வியாலோசனை சபை (Senate) க்கும் இவர் அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். பம்பாய் எலிபின்ஸ்டன் கலாசாலையில் விசேஷ கௌரவம் பெற்ற நௌரோஜியே சீமையிலும் முதலிந்திய ஆசிரியராக விளங்கினார். ஐரோப்பியர்களும் நௌரோஜியிடம் அதிக அன்பு செலுத்தி வந்தனர். 1862-ம் ஆண்டில் சில மனஸ்தாபங்கள் வந்துற நௌரோஜி காமா கம்பெனியினின்றும் விலகிக்கொண்டு தனிமையாக ஓர் வியாபாரத்தை ஆரம்பித்து நடத்தி வந்தார். உலகில், எத்துணை செல்வவந்தராயினும், எவ்வளவு கற்றவராயினும், ஆற்றலவரிடம் அடைக்கலம் புகுந்திருப்பினும், 'காலம்' என்பவன் கஷ்டத்தையோ, நலத்தையோ அன்னவருக்கு வழங்கும்போது அவர் அதனை நிராகரிக்க முடியாது. அதுபோல, 1866-ம் வருடத்தில் துரதிர்ஷ்டமானது நௌரோஜியையும் விடாது பற்றவே, அவருடைய கம்பெனி நஷ்டத்திற்கிலக்காயிற்று. நௌரோஜி தமக்கேற்பட்ட நஷ்டததை எண்ணி, எண்ணி ஏக்கமுறாது சாமார்த்தியமாகவும் துரிதமாகவும் யாவற்றையும் ஒழுங்கு செய்துகொண்டு 1869-ஆண்டில் தம்

## தாய் நாட்டிற்குப் பிரயாணம்

ஆனார். பம்பாய்வாசிகள், காட்டிற்குச் சென்ற ஸ்ரீரகுராமன் திரும்ப அயோத்தியை யடைந்தபொழுது குடிகள் எவ்விதம் அவரை வரவேற்றார்களோ, அந்தவகையில் தாதாவைக் குழந்தைமுதல் விருத்தர்வரையில் கடற்கரைக்குச் சென்று குதூகலத்தோடு வரவேற்றனர். பிரிந்தவர் கூடுங்கால் அங்கு ஆனந்தமும், பாஷ்பமும், தழுவலும், மகிழ்ச்சியும், இன்ப வசனங்களும், பொங்கி எழுவது இயற்கையன்றோ! அன்று நௌரோஜிக்கு ஓர் வரவேற்புப் பத்திரமும், முப்பது ஆயிரம் ரூபாய்கொண்ட பணப்பையொன்றும் அளிக்கப்பட்டன. சில ஆண்டுகள் செல்லத் தாதாபாய் அரசாங்கத்தாரிடத்தில் இந்தியரின் வரவு செலவைப்பற்றி சாட்சிகூறி, ஏழைமக்களின் குறைகளை யெடுத்துரைக்க

## மேனாட்டுக்குப் பிரயாணம்

ஆனார். அக்காரிய விசாரணை கமிட்டிக்கு 'பாசட் கமிட்டி' என்று பெயர். சீமையில் தாதாபாய் இந்தியர்கள் ஏழைகளென்றும், ஒவ்வொரு இந்தியரின் சராசரி வருமானம் மாதம் இருபது ரூபாய்க்கு மேற்படாதென்றும் தக்க ஆதாரங்களுடன் எடுத்துரைத்தார். பாசட் கமிட்டியின் வாயிலாக, அரசாங்க ஆங்கிலேய அதிகாரிகளின் அளவுக்கு மிஞ்சின சம்பளம், இந்தியாவில் உயர்ந்த அரசாங்கப் பதவிகள் இந்தியர்களுக்கு அளிக்கப்படாதது முதலான விஷயங்களைத் தெளிவாகக் கணக்குகளுடன் மேல்நாட்டாருக்கு எடுத்துக் கூறியமுதலிந்தியர் நௌரோஜியேயாவர். இவ்விஷயங்களைப் பலரும் அறிய 1873-ம் ஆண்டில், 'இந்தியரின் வறுமை' என்ற புத்தகத்தையும் இவர் வெளியிட்டார். இவர் சீமையிலிருந்து திரும்பிவந்த பின்னர் பரோடா சமஸ்தான மன்னர் மூல்கார் ராவ் கேய்க்வார், ஆளுந் திறமைகுன்ற, சில்லறை தேவதை

கள் குடிகளை வருத்த, குடிகள் தவிக்க, சமஸ்தானம் சீர்கேடடைந்திருந்த தால் ராஜீய விஷயங்களி லனுபவம் வாய்ந்த நமது நௌரோஜிக்கு 1874-ல்

திவான் பதவி

அளித்தனர். தாதா ஒரேவருஷகாலம் அப்பதவியை வகித்தாராயினும், குறிப்பிட்ட அச்சிறுகாலத்திற்குள்ளாகவே அவர் அக்குட்டிப் பிசாசுகளை அடக்கி, குடிகளுக்கு நீதிவழங்கி, அரசாங்க நடவடிக்கைகளையும், கணக்குகளையும் சீர்படுத்தினர். 1875-முதல் 1877-வரையில் நௌரோஜி பம்பாய் நகரபரிபாலன சபையின் அங்கத்தினராகவிருந்து பல சீர்திருத்தங்களைச் செய்தார். 1885-ல் அரசாங்கத்தார் தாதாபாயை பம்பாய் சட்டசபையின் அங்கத்தினராக நியமனஞ் செய்தார்கள். அதிலும் தாதா விசேஷசேவை புரிந்தாரென்பது நாம் கூறாமலே புலனுகும். இவ்வாண்டிற்றான் முதல் முதலாக அகில இந்திய காங்கிரஸ் மஹாசபை கூடிற்று. நௌரோஜி காங்கிரஸ் நடைபெறுவதற்கு அதிக சிரம மெடுத்துக்கொண்டார். 1886-ம் வருடம் நௌரோஜி சீமைக்குச் சென்று பாராளுமன்றத்தின் (Parliament) அங்கத்தினர் ஸ்தானம் பெற உதார (Liberal) கட்சியின் சார்பாக கார்பர்ன் என்னும் பிரிவின் அபேக்ஷகராக நின்றார். அக்காலத்தில் அங்கு உதாரக்கக்ஷியார் சிறுபான்மையராயிருந்த காரணத்தால் தேர்தலில் நௌரோஜி தோல்வியுற்றார்: அதே ஆண்டின் முடிவில் சீமையைவிட்டுப் பிரயாணமாகி இந்தியாவை யடையவே டிசம்பர் மாதத்தில் கல்கத்தாவில் கூடிய இரண்டாவது காங்கிரஸ் அக்கிராசனர் பதவி இவருக் களிக்கப் பெற்றது. அச்சபையில் தாதாபாய் நௌரோஜி தாம் தம் அனுபவத்தி லுணர்ந்த இந்தியர்களின் துயரங்களையும், இந்தியநாடு முன்னேற்ற மடைவதற்கான வழிகளையும், தாம் சீமையில் இந்தியர்களின் நிலையை எடுத்தோதிய விதத்தையும் தெளிவாகக்கூறி, காங்கிரஸ் மஹாசபை ஒவ்வொரு ஆண்டும் இந்தியாவின் முக்கியமான பல இடங்களிலும் கூடித் தனது குறைகளைத் தீர்மானங்களாக்கி அனுப்பவேண்டுமென்றும் ஓதிப் பல திட்டங்களைச் செய்தார். இதற்கு விக்டோரியா மஹாராணியார் அவர்களும் ஆதரவளித்தனர்.

(தொடரும்) **S. V. வரதராஜய்யங்கார்,** சரஸ்வதி நிலையம், உறையூர்.

---

## கிராம வாழ்வில் காங்கிரஸ் சேவை.

பண்டைய காலந்தொட்டே இந்தியர்களுக்கு இயற்கைத் தேசாபிமான முண்டு. வடநாட்டில் மாதரம்=தாயை, வந்தே=நமஸ்கரிக்கின்றேன்—என்ற பொருள்பட 'வந்தேமாதரம்' என்னுங் கீதம் வழக்கிலிருந்து வருகின்றது. தென்னாட்டில் அநாகரீகரான நரிக்குறவரிடத்திலும் அக்கால முதல் இன்றளவும்

'பச்சைமலை பவளமலை எங்களது நாடு
பவளேசன் வாழுமலை எங்களது நாடு
கொச்சிமலை குடகுமலை எங்களது நாடு
குமரேசன் வாழுமலை எங்களது நாடு'

என்ற பழம்பாட்டு உற்சாகத்துடன் பாடப்பட்டு வருகின்றது. தேச இயக்கம் ஆரம்பமான பின்னர் தேசாபிமானிகளிற் சிறந்த கவி ரவீந்திர நாததக்கோர் வங்காள பாஷையில் பலதேசீய கீதங்களைப் பாடி அவற்றைப் பொது ஜனங்களின் மனதைப் பற்றச் செய்தார். தமிழ் நாட்டிலோ ஸ்ரீ சுப்ரமணிய பாரதி பல இன்பமான அருள் வாக்கியங்களை இசைப்படுத்தி, நமக்கீந்தனர். தேசாபிமானம் வலுப்பட, கீதமும் பெருத்த உதவிபுரிந்து வருகின்றது. அச் சங்கீதத்திற்கு அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கினையும் அளிக்க வல்ல ஆற்றலுண்டெனினும் ஒக்கும்.

நிற்க, கிராமவாழ்வில் நமது காங்கிரஸ் இயக்கம் எந்தவகையில் எத்துணைதூரம் ஆதரணைபெற்று வருகின்றதென்பதைச் சற்றுராய்வோம். கிராமங்களில் தேசாபிமானமோ, பாஷாபிமானமோ, மதாபிமானமோ இந்நிலையில் அதிகமான ஆதிக்கம்பெற்றிருப்பதாகக் கூறவியலாது. ஆனால், கிராமவாசிகளுக்கு எவ்வித அபிமானமும் புகட்டப்படின், அவர்கள் அவ்வபிமானத்தில் நம்மைவிடத் தீவிரமாக ஒழுகும் ஒழுக்கமுடையவராவார்களென்பதி லையமில்லை. தற்காலப்போக்கில் காங்கிரஸ் பிரசாரம் பட்டிணங்களில் கூட்டங்களுடன், பட்டம் பூண்டு, சட்ட சதியாலோசனைகளைச்செய்து, திட்டம்போட்டு நடை பெறுகின்றதேயன்றி, பட்டிக்காட்டில் எட்டிப்பார்த்தவர்களைத் தட்டியெழுப்பச் சிறிதளவான முயற்சியும் எடுத்துக்கொள்ளவில்லை. "ஏ! பட்டிக்காட்டான்! எட்டிச்செல்" எனத் திட்டவே பட்டினவாசிகளின் பான்மை கூறுகின்றது. தினசரிப் பத்திரிகைகளைப் பார்த்து தேசநிலையையும், கக்ஷிகளின் போக்கையும், காங்கிரஸ் வாக்கையும் பட்டினத்தார் அறிவதுபோலக் கிராமவாசிகளுணர ஆங்குப் பத்திரிகைகளுமில்லை. நமக்கு ஜீவரத்தினத்தை—உண்ணும் உணவிற்கான தானியத்தை உற்பத்திசெய்யும் களங்கமற்ற மனதையுடைய கிராமவாசிகளின் ஒத்துழைப்பின்றி—குடியானவர்களின் அடிப்படையான அபிமானமில்லாமல், நமது நாடும்—அதன் காங்கிரஸ் மகா இயக்கமும் எவ்விதம் குறித்த நன்மையைப் பெறக்கூடுமென்பதைச் சற்று உற்றுநோக்கின் உண்மை புலப்படாமற் போகாது. ஆனால் தேசமகா தலைவர்களு மிதைக் கவனியாதிருக்கவில்லை. வங்காள சிங்கமான தாஸர்—தொண்டர்—தேச சேவகர் "உடல் நாம். உயிர் கிராமவாசிகள்! கிராமங்களில் காங்கிரஸ் இயக்கம் ஆரம்பமாக வேண்டும்! கதர் பெருகவேண்டும்! கட்குடி மடியவேண்டும்! தீண்டாமை தீவாய்ப்படவேண்டும்! கிராமங்களிலேயிருந்து பெரிய நகரங்கள் வரையில் தேசஊழியம் பரவவேண்டும். அப்போதுதான் காங்கிரஸ் ஹிந்துமதத்தைவிடப் பன்மடங்கு வலுப்பட்டதாகும்! பட்டிக்காட்டார் என்று கூறி யிகழ்வது நமது அறியாமையேயன்றி வேறில்லை" என்று பல மஹாநாடுகளிலும் பகர்ந்து போந்தார். அதை நிறைவேற்ற அவரில்லாதது நமது துர்ப்பாக்கியமேயாம். அறச்சுடரனைய அடிகளும் 'தீண்டாமை, கட்குடி, அந்நிய ஆடை இவை கிராமாந்தரங்களிலே யதிக ஆதிக்கம்பெற்றிருக்கின்றன. ஆங்கே நாம் நம் பிரசார வேலையை ஆரம்பிக்கவேண்டும்" என்றரு

ளினர். ஆனால், பல காரணங்களை முன்னிட்டு மஹாத்மா ராஜீய விஷயத்தில் சிலகாலம் தலையிடப் பிரியமற்றவரானதால் கிராமப்புனருத்தாரணவேலை தடைப்பட்டுப்போயிற்று. இது இவ்வாறாக, சில ஆண்டுகளாகக் காங்கிரசின் பழயதிட்டங்களை மாறிவிட்டன. 'வல்லான் வகுத்ததே வாய்க்கால்' என்னும் வழக்கில், காங்கிரசில் கக்ஷிபேதங்கள் கிளம்பிவிட்டன. அவை பட்டிக்காடு முதல் பட்டினம் வரையில் நம்மிடமுள்ள மட்டி வழக்கங்களை வெட்டி எறிய முற்படாமல் சட்டசபையைக் கிட்டுவதிலேயே கொட்டு முழக்கமிட்டு நிற்கின்றன. ஆங்கு அவர்கள் எத்துணை வேலைசெய்ய முடியுமென்பதை அச் சபைகளின் நிகழ்ச்சிகளே கூறும். கக்ஷிகளெல்லாம் பந்தயக்குதிரைகளாக மாறி, தந்திரத்தால்—மந்திரத்தால் மாங்கனியைக் கொள்ளப்பார்க்கின்றன. தேசநலம் மறைந்து சுயநலம் நிறைந்து கக்ஷிகள் திகழ்கின்றன. அந்தப் பரிதாபநிலையை விரித்துக்கூற நமது 'ஆனந்தபோதினி'யில் இடமில்லை. கதர் என்பதென்ன? அதை அடிகளுணர்த்திய தாத்பரியமென்ன? கதராடை எவ்விதம் நமது நாட்டிற்கு நன்மைபுரியும்? குடித்தாலென்ன? அந்தத் தடுப்பதாலுண்டாகும் நன்மைகள் யாவை? தீண்டாமை ஏன்வேண்டாம்? என்ற விஷயங்களை அறியாத கிராமவாசிகள் நூற்றுக்கு எண்பதுபேர்களிருக்க நமக்கெவ்விதம் நாடிய பொருள் கைகூடும். சட்டசபை பட்டிக்காட்டிலெவ்விதம் இவற்றைப் பரப்ப முடியும். கிராம ஏழைக்குடியான சகோதரர்களின் ஊழியத்தை—உதவியை—சேவையை நாம் இந்நிலையில் பெற்றால்மட்டுமே காங்கிரஸ் இயக்கம் வலுப்படுமென்பது இதினின்றும்பெறப்படுமுண்மையாம்.

ஆகையால், காங்கிரஸ் அபிமானிகளோ, தலைவர்களோ, சட்டசபை அங்கத்தினர்களோ, பொதுவில் தேசக்ஷேமத்தைக்கருதி ஒவ்வொரு சிறு கிராமத்திலும் சிறு பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தி, கிராமவாசிகளை ஆங்கு இராட்டைகளைச் சுற்றச்செய்து, தறிபோட்டு ஆடை நூற்றணியச்செய்து அவர்களைப் பரிசுத்தராக்கவேண்டும். அப்பாடசாலையில் தேசீய கீதங்களைப் பாடபுத்தகமாகவைத்து மாணவர்களுக்கு தேசபக்தியை யூட்டவேண்டும்! கட்குடியை நயத்தாலும் பயத்தாலும் சிறிது சிறிதாகக் கிராமங்களைவிட்டு வெளிப்படுத்தவேண்டும். தீண்டாமையை ஒழிக்கத் தீவிர உழைப்புவேண்டும். ஒப்பற்ற இந்துசமயத்தின் உண்மைகளைப் பரப்புவதற்கான ஊழியம் செய்தல் வேண்டும். இவை கிராமவாச மாணவர்களிடமிருந்து புறப்பட்டால் பெரியவர்களும் பெண்டிரும நல்வழிப்படுவர். அதனால் நானில நன்மையோங்கும்! அத்தகைய தொண்டே இத்தருணம் வேண்டும்! அவை கைகூடத் தக்க முயற்சியை நாம் எடுத்துக்கொள்ளவேண்டும். அன்னையைப் போற்றல் வேண்டும். அவளே கருணைக்கடல்; அவளன்பே உலகிற் பெரிது. வீண் மனப்பால் குடிக்கும் மாந்தரது வீம்பை முடித்து ஞானப்பாலூட்ட வல்லவள் அப்பாரதத் தாயே! அவளடிகளே நமது கோயில்! அன்னையின் திருத்தாள்கள் வாழ்க!

'கலப்பையிலிருந்து காங்கிரஸ் இயக்கம் வலுப்படவேண்டும்'—தாஸர்.

ஸ்ரீ வே. வ. திருமுக்கீச்சுரம்.





## யோகம்.

(450-ம் பக்கத் தொடர்ச்சி.)

முற் கூறியபடி அப்பியாசித்து ஆசனங்களில் சித்திபெற்றவன் யோகத்திற்கு முதலங்கமான பிராணாயாமத்தை அப்பியாசிக்கவேண்டும். சித்தித்த ஆசனங்களில் தனக்குச் சுகமாயிருக்கும் ஆசனத்திலிருக்கவேண்டும். சித்தாசனம் முதலிய நான்கு ஆசனங்கள் சிறப்புடையன வென்பதை மறக்கப்படாது. பிராணாயாமத்தை அப்பியசிக்கிறவன் இந்திரியநிக்கிரகம் மிதாகார போஜனங்களை அனுசரிக்கவேண்டும். பின் குரு உபதேசித்தபடி முறை தவறாமல் பிராணாயாமஞ் செய்யவேண்டும். மனதை நிறுத்துவதே யோகத்தாலாகும் பயனும். வாயு சலித்தால் மனமும் அசையும். வாயு அடங்கிநின்றால் மனமும் அசையாமல் நிற்கும். மனமும் வாயுவும் அசையாமல் நிலையாய் நிற்குமானால் அதுவே யோகசித்தியாம். அவன் நீடித்த ஆயுசையும் சகல சித்திகளையும் பெறுவான். பிராணன் சரீரத்தைவிட்டுப் பிரிவதே மரணமென்னப்படுமாதலால் வாயுவை நிறுத்துவதால் ஆயுசும் விருத்தியாகும். நாடிகளெல்லாம் மலத்தால் வியாபிக்கப்பட்டிருக்கும். அம்மலநீங்கினால் நாடிகள் சுத்தப்படும். அப்போது பிராணாயாமம் எளிதில் கைகூடிப் பிராணவாயு சுழுமுனை நாடியைநோக்கிச் செல்லும். பிராணாயாமத்தால் நாடிகள் மல நீங்கிச் சுத்தமாகும். அதனாற் பிராணாயாமத்துக்கு நாடி சோதனை யென்பதும் ஆன்றோர் வழக்கு. மலசோதனை யென்பது முண்டு.

பிராணாயாமம், பூரகம், கும்பகம், ரேசகம் என முத்திறத்ததாம். பூரகமென்பது வெளிவாயுவை உள்ளுக்கு இழுத்தல். கும்பகமென்பது இழுத்த வாயுவை உள்ளே நிறுத்துதலாம். இரேசகம் என்பது நிறுத்தின வாயுவை மெதுவாக வெளியில்விடுதல். இந்தப் பூரக இரேசக கும்பகங்கள் மூன்றும் பிராணாயாமாங்கம் என்னப்படும். இம்மூன்றும் சேர்ந்ததே பிராணாயாமம்.

இடகலை (சந்திரநாடி) பிங்கலை (சூரியநாடி) சுழுமுனை என மூன்று நாடிகள் பிரதானங்களாம். முதலில் பிங்கலை (சூரியநாடி) யால் வாயுவை உள்ளே இழுத்து வயிற்றை நிரப்பவேண்டும். இப்படி நிரப்பி நிறுத்துவதே பூரகமாம். பூரித்துக் கும்பித்த வாயுவை இடகலையால் மெதுவாய்விடவேண்டும். இந்தப் பிராணாயாமயோகத்தை வாலிபன் விருத்தன் எல்லாரும் ஜாக்கிரதையுடன் செய்யலாம். சரீரத்தில் வேர்வை நடுக்கம் உண்டாகும்வரையில் கும்பகம் செய்யலாம். எந்த நாடியால் பூரகம் செய்யப்படுகிறதோ அந்த

நாடியால் ரேசிப்பது (வாயுவை விடுதல்) கூடாது. மறுநாடியினுலேயே விட வேண்டும். அதாவது பிங்கலையால் பூரித்தால் இடகலையாலும், இடகலையால் பூரித்தால் பிங்கலையாலும் விடவேண்டும். பூரித்த நாடியால் ரேசித்தால் வாயு வெகுவேகமாய் வெளிவரும். வந்தால் அது சரீரபலத்தைக் குறைக் கும். ஆதலால் மறுநாடியால் விடவேண்டும். எந்த நாடியால் இரேசகம் செய்யப்படுகிறதோ அதனுலேயே மறுபடி பூரகம் செய்யவேண்டும். இவ் வாறு இடைகலை பிங்கலைகளால் மாறி மாறிப் பிராணுயாமம் செய்து பழகி னுல் மூன்றுமாசகால அளவில் நாடிகள் சுத்தமாகும்.

ஒருநாளில் நாலுதடவை அல்லது மூன்றுதடவை செய்யவேண்டும். காலை, நடுப்பகல், சாயங்காலம் நடுராத்திரி ஆகிய நாலுவேளைகளில் செய்ய வேண்டும்.

காலையில் அறுபது பிராணுயாமம், பகலில் நாற்பது, சாயங்காலம் இரு பது, நடுராத்திரியில் இருபது செய்து பழகவேண்டும். மாதாந்தரத்தில் தட வைக்கு எண்பது செய்யலாமென்று கூறப்பட்டுள்ளது. உதித்து ஆறுநாழிகை வரையில் பூர்வான்னம்; அதற்குமேல் பன்னிரண்டுநாழிகைவரையில் பரான் னம்; மேல் பதினெட்டு நாழிகைவரையில் மத்தியான்னம்; மேல் இருபத்து நாலுநாழிகைவரையில் அபரான்னம்; மேல் அஸ்தமான பரியந்தம் சாயான்ன மென்று பகல் ஐந்துபாகமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. பகலில் பூர்வான்ன மும், மத்தியான்னமும், சாயான்னமும் பிராணுயாமஞ் செய்வதற் குரிய காலமாம். நடுராத்திரியில் செய்வதே இரவுக்குக் காலமாம்.

பிராணுயாமமென்பது பிரணவ சொரூபமாம். அகார, உகார, மகாரங் கள் ஒன்று கூடியதே பிரணவ ஏகாட்சரமாம். இந்த மூன்றெழுத்துக்களும் பிரம விஷ்ணு ருத்திர சொரூபமாகவும், காயத்திரி சாவித்திரி சரஸ்வதி சொரூபமாகவும் கூறப்படும். இச்சொரூபங்களைத் தியானித்துக்கொண்டு பூரக கும்பக ரேசகங்களைச் செய்யவேண்டும். எப்பொழுதும் ஒன்றைப்பற் றியே நிற்கும் இயல்புள்ள மனம் தனித்துநில்லாதாகையால் இவற்றைத் தியானிக்கவேண்டும். அகாரமூர்த்தி செந்நிறமுடையது; அன்ன வாகனத்தி லிருப்பது; கையில் தண்டமுடையது; இதுவே காயத்திரியாம்; வாலை யெனவும் படும். உகாரம் பொன்னிறமும் கருடவாகனமு முடையது; கையில் சக்கரமுடையது; யௌவன பருவமுடையது; இதுவே சாவித்திரி எனப்படும். மகாரமூர்த்தி கருமைநிறமும் வயதுசென்றதும், கையில் சூலாயுத முடையதுமாம். இதுவே சரஸ்வதியாம். இம்மூன்றிற்கும் பிரணவமே மூலம் ஆதலால் பிரணவத்தைச் சிந்தித்துக்கொண்டு பிராணுயாமம் செய்யவேண் டும். இடைகலையால் வாயுவைப் பூரித்து (பதினாறுமாத்திரையளவு) அகாரத் தைத் தியானிக்கவேண்டும். அறுபத்துநாலு மாத்திரையளவு கும்பித்து உகா ரத்தைச் சிந்திக்கவேண்டும். கும்பித்ததை மகாரத்தைத் தியானித்து முப்பத் திரண்டு மாத்திரையளவு ரேசித்தல் வேண்டும். இமைகொட்டுமளவே ஒரு மாத்திரையளவாம். ரேசகத்தை அதிகமாகச்சொன்னது மெதுவாக வாயுவை வெளியில் விடவேண்டும், வேகமாய் விடக்கூடாது என்பதை விளக்குதற்கே. பிரம க்ஷத்திரிய வைசியர்களாகிய துவிஜகிரகஸ்தர்களுக்கு வியாகிருதி காயத் திரி சிரசுகளுடன் கூடின காயத்திரி மஹாமந்திரமே பிராணுயாமமந்திரமாக விதிக்கப்பட்டது. இதை யுச்சரித்துக் காலையில் பத்தும், பகலிற் பத்தும் மாலையிற் பத்தும் செய்யவேண்டும். இதைத்தான் செய்யவேண்டுமென்கிற நிர்ப்பந்தமில்லை. சௌகர்யமும் சத்தியுமுள்ளவர்கள் இந்தப் பிரணவோச் சாரண பிராணுயாமமே செய்யலாம்.

இந்தப் பிராணுயாமம் சகற்பம் அகற்பமெனு இருவகைப்படும். சகற்பமென்பது மந்திர உச்சாரணம், மூர்த்தி தியானங்களுடன் செய்வது. அகற்பம் என்பது அவைகள் இல்லாமற் செய்வது. இதுபூர்வஜன்மங்களிற் செய்த அனந்த புண்ணியமுடையவர்களுக்கேயன்றிச் சித்திப்பது அருமை. ஆதலால் நூதன அப்பியாசிகள் சகற்ப யோகம்பயில்வதே நன்று. மந்திரோச்சாரணம் மூர்த்தி தியானமாகிய இரண்டு தொழில்களையும் செய்தலால் மனம் வேறு வழியிற் செல்லாமல் அடக்கலாம். பிரணவமே மந்திரம். முன்கூறிய காயத்திரி சரஸ்வதி சாவித்திரிகளே மூர்த்தி. பிரம விஷ்ணு ருத்திரர்களையுந் தியானிக்கலாம். புருவமத்தியில் பார்வையைச் செலுத்தவேண்டும். அதுவே ஞானஸ்தானமாம். இதுவே ஆக்ஞையுமாம். இனி மாத்திரையென்பது கைந்நொடி கண்ணிமைப்பொழுதேயாயினும் யோகநூலோர் கூறும் வழியாவது, நடுவிரலிடம் பெருவிரலையும் சேர்த்து நொடிக்கிறகாலத்தை ஒரு மாத்திரை யென்பர் சிலர். முழங்காலை மூன்றுதரந் துடைத்தலை ஒருமாத்திரை யென்பர். தூங்குகிற புருஷனுடைய சுவாசம்போய்த் திரும்புகிற காலமே ஒருமாத்திரை யளவென்பர். ஆதலால் இம்மாத்திரைகளை யறிந்து பிராணுயாமத்தை அனுஷ்டிக்கவேண்டும்.

(தொடரும்.) சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

உ

சிவமயம்




## எறிபத்தநாயனுா புராணத்தின் சில விசேடக் குறிப்புகள்

(453-ம் பக்கத் தொடர்ச்சி.)

### இன்னமலர் இன்ன தேவர்க்காமெனல்.

" வில்வமுடன் கொன்றைமலர் சங்கரற்கு நேயம்
வேழமுகற் கருகு வெட்சி கடம்பு விசாகனுக்காங்
குல்லை நெடுமாய * * 'கட்குநீலங்
கோகனத * * திருமகட்கு நெய்தல்
வல்லகலை மடந்தைக்கு வெண்கமல நேயம்
வருங் கொடிய கடவுளர்க்குச் செம்மலர்க ணேய
மல்லிமலர்க் கருங்குவளை யனைவருக்கு நேய
மம்மலரே யெம்மலர்க்கு மதிகமென வரைப்பார்.

(ஞானப்பிரகா-புட்பவிதி-27.)

### இன்னமல ரின்னதேவர்க் காகாதெனல்.

" தும்பை மறையோர் தமக்காகா தூர்க்கைக் கறுகம் புல்லாகா
வெம்பு கதிர்வா னவன்றனக்கு வில்வ மாகா விநாயகற்கு
வம்பார் துளபந் தானாகா வடுகன் றனக்கு வலம்புரியு
மம்பை தனக்கு நெல்லியுமிங் காகா வென்ப ரறிந்தோரே."
(ஞானப்பிரகா-புட்பவிதி-28.)

### விஷ்ணுவுக் காகு மலர்கள்.

" மாதவி குருந்து வாகை மதயாணி கருங்காக் கொன்றை
சீதள முருக்குச் செம்பட் டலரியே செம்ப ரத்தை
கேதகை கருந்து மாய்செந் திலகமுங் கேச வற்கா
நாதனுக் காகாவிந்த நறுமல ரலகைக் காமே."
(ஞானப்பிரகா-புட்பவி-29.)

### கேதார நாதர்க்குரிய பத்திர புட்பங்களாவன.

" வில்லமருச் சூதமத்த மாதுளையே நொச்சி
மேவியமுள் ளிலந்தை நறுங்க * * செழுவன்னி
சொல்லியகத் திரிநெல்லி சண்பக * *
தும்பையொடு மருதுமா மந்தார * *
யெல்லவரும் புகழுமந்த விஷ்ணுகாந்தி
யெழிற்றேவ தாருவுட னெருக்கறுகென் றுரைக்கு
நல்லனவாம் பத்திரங்க ளிருபத் தொன்று
நாடரிய கேதார நாதனுக்கர்ச் சனையே".
(ஞானப்பிரகாசர்-புட்பவிதி-23.)

### பஞ்ச வில்வம்.

" மெச்சியே யடியவர் வியந்து சாத்திடு
நொச்சியே நறுவிளா நுவன்ற கூவிளம்
வைச்சிடுங் கிளுவையே மாவி லிங்கையின்
பச்சிலை யென்றிவை பஞ்ச வில்வமே." (ஷை—16.)

### விநாயக சதுர்த்திக்குரிய பத்திர புட்பங்கள்.

" மேதகுமா சிப்பச்சை நறுங்கையாந் தகரை
வில்வமுட னூமத்தை நொச்சிநா யுருவி
யேதமில்கத் தரிவன்னி யலரிகாட் டாத்தி
யெருக்குமரு துடன்மால் பேரியம்பு காந்தி
மாதுளையே யுயர்தேவ தாருமரு நெல்லி
மன்னுசிறு சண்பகமே கெந்தளிபா திரியே
யோதரிய வறுகிவையோ ரிருபத் தொன்று
முயர்விநா யகசதுர்த்திக் குரைத்திடுபத் திரமே".

### துளப மெடுக்க லாகாத நாள்.

" இரவொடு காலைமாலை யிரவியே வெள்ளி செவ்வாய்
பரவு மட்டமியீ ராறு பதினான்கு பர்வ மோணம்
விரவிய மாதத் தாதி விதிபாத மபரா ணத்தின்
மருவிய துளபங் கொய்யின் மால்சிரங் கொய்த லாகும்."
(ஞானப்பிர-புட்பவிதி-6.)

### வில்வ மெடுக்கலாகாத நாள்.

" தவமுறு மாதமுன் சதுர்த்தி யட்டமி
நவமியே சதுர்த்தசி நவின்ற நல்லுவா
வவமறு சோமவா ரத்து மன்பர்கள்
சிவனருச் சனைசெயும் வில்வந் தீண்டிடார்."

(ஞானப்பிரகா-புட்பவிதி-7.)

### எடுக்கு முறையாவது.

" எடுத்துவைத்தே யலர்ந்த மலர் பழம்பூக்கண் மற்ற
வெருக்கிலையா மணக்கிலை * * திந்த பூக்க
ளுடுத்தபுடை வையிற்கரத்தின * * க்க
ளுதிர்ந்திடுபூ வரைகீழு * * க்க
ளடுத்தபுழுக் கடியெச்சஞ் சிலந்திமயி ருறுத
லங்கையில்வைத் தங்கைகுவித் திடுதல்கங்கு றனிலே
யெடுத்தமலர் நீரமிழ்த்தல் புறங்காட்டி லெய்த
லெச்சில்குளி யாதெடுத்த விழிபெனுமா கமமே."

(ஞானப்பிர-புட்பவிதி-13.)

" மடியினிற் பறித்திடும்பூ மலர்ந்துகீழ் விழும்பூ முன்னு
ளெடுபடு மல ரிளம்பூ விரவினி லெடுத்தி டும்பூ
தொடர்நோயன் றீககை யில்லான் றூர்த்தனு சாரமற்றோன்
கொடுவரும் பூ வனைத்துங் குழகனுக் காகா வன்றே."

எனக் கூறியிருத்தலால் அவைகள் இழிவாமென விலக்கி,

" வைகறை யுணர்ந்து போந்து புனன்மூழ்கி வாயுங் கட்டி
மொய்மலர் நெருங்கு வாச நந்தன வனத்து முன்னிக்
கையினிற் றெரிந்து நல்ல கமழ்முகை யலரும் வேலைத்
தெய்வநா யகர்க்குச் சாத்துந் திருப்பள்ளித் தாமங் கொய்து".

(எறிபத்தநாயனார் புரா-9.)

" கோலப்பூங் கூடை தன்னை நிறைத்தனர் கொண்டு நெஞ்சில்
வாலிய நேசங் கொண்டு மலர்க்கையிற் றண்டுங் கொண்டங்
காலய மதனை நோக்கி யங்கணர்க் கமைத்துச் சாத்துங்
காலைவந் துதவ வேண்டிக் கடிதினில் வாரா நின்றார்.

(எறிபத்தர் புரா-10.)

" காலைவா யெழுந்து நறும்புன லாடிக் கவினுரு நிறையநீ றணிந்து
சோலைவாய்ச் சுரும்ப ராய்பிழி மாந்தச் சூழுமுன் றூமலர் கொய்து
சாலைவாய் மருவி மரபுடனுய்ந்து தண்ணறும் பிணையலாப் பிணித்து
மேலைவா யமரர் தொழுஞ்சின கரத்தின் மேவியா லயவல மிட்டே"

(கருவூர்ப்புராணம்-நியமச்சருக்கம்-58.)

" நீரிலை கீழுற விருந்து பூத்திடுஞ்
சீரிய துழாய்மலர் தினமுங் கொய்யலா
மூரிடும் புழுக்கடி யொன்று மேயலாற்
பாரினி லவையெலாம் பழுதில் வில்வமே".

(ஞானப்பிரகாசர்-புட்பவிதி-9.)

*

" செழித்திடுந் துளபமுஞ் சிறந்த வில்வமும்
வழுத்துபொன் மத்தமு மலரு நீலமு
மழுத்துசெம் பொன்மல ரதனைப் போலவே
கழித்தநிர் மாலியங் கழுவிச் சாத்தலாம்." (ஷை—10)

" அம்புய மேழுநா ளலரி மூன்றுநாள்
வம்பவிழ் குடலையில் வைத்துச் சாத்தலா
நம்பிடு நறுமலர் நண்ணி டாவிடிற்
றம்பழுப் பரும்பிலை தளிருஞ் சாத்தலாம்." (ஷை.—11.)

**இன்ன இன்ன காலங்களுக்கு இன்ன இன்ன புட்பங்கள் ஆமேனல்.**

**வார புட்பம்.**

" பங்கய மலர்ந்தவெள் ளாம்பல் பாசடைச்
செங்கழு நீர்மலர் தகரச் செம்மலர்
தங்கிய குவலயந் ததைவெண் டாமரை
மங்கைகே ணீலமேழ் வார புட்பமே."

(தொடரும்) பஞ்சாட்சரபுரம், **வாலையாநந்தம்.**





## சன்மார்க்கத்துக்கேற்ற சற்போதங்கள்.

(461-ம் பக்கத் தொடர்ச்சி.)

தோகையர் மயக்கில் தாகம்வை யாதே
நற்குண நங்கையர் கற்பினைக் காப்பர்
நாற்குணந் தாங்குதல் வேற்கணார்க் கழகு
நிலையிற் பிரிவோர் மலைவுற் றிடுவர்
நீத்தார் பெருமையை ஏத்தித்தொழு நிதம்
நுண்ணறி வதனல் கண்ணியந் தேடு
நூதனக் கைத்தொழில் சாதனம் பண்ணு
நெற்பயிர் விளைப்பவர் பொற்புற வாழ்வர்
நேர்பட வொழுகுதல் யாருக்கு மேற்கும்
நைந்தவர் தம்மை நிந்தனை செய்யேல்
நொடிப்பொழு தேனும் படிப்பை விடாதே
நோவை வெறுப்பவர் நாவைப் பேணுவர்
பஞ்சாட் சரத்தினை நெஞ்சில் நிதம்நினை
பாவத்தில் நின்றால் ஆபத்து நேரும்

பிறவிப் பிணியோ ருறவா டாதே
பீடுடை யாரை நாடு துதிக்கும்
புலையில் வெறுப்பு நலமிக நல்கும்
பூண்பணி யனைத்தும் வீண்செல வாகும்
பெற்றவர் வாழ்த்தின் நற்றவம் நாடும்
பேதைசொற் கேட்பவர் வாதைப் படுவர்
பைசா வழிப்பவர் உய்வதை யெண்ணார்
பொருளினும் மிக்கது அருளென நீயறி
போரை மறப்பவர் சீரைத் தேடுவர்
மண்பொன் பெண்ணை எண்ணிக் கெடாதே
மாலையுங் காலையும் ஆலயச் சேவைசெய்
மித்திரர் தமைநிதம் புத்தியாய்ப் பேணு
மீளா வடிமைக் காளா காதே
முன்வினை யெல்லாம் பின்னமைத் தாக்கும்
மூத்தோர் வாழ்த்தெமைக் காத்தி ரட்சிக்கும்
மென்மைப் பேச்சு நன்மையை நாட்டும்
மேழி பிடிப்பவர் வாழ்வெய் திடுவர்
மைவைப் பவரைச் சையெனத் தள்ளு
மொழி செயல் சிந்தையில் இழிவடை யாதே
மோக மொழிந்தவர் ஏகனை யேத்துவர்
வறுமையிற் செம்மை உறுதி பயக்கும்
வாக்குத் தவறுதல் நீக்கு முயர்வு
வித்தையில் விருப்பு சித்திக் கவசியம்
வீடு பெற்றவர்க் கீடிங் கில்லை
உற்ற சினேகிதர் பெற்றோர் போல்வர்
ஊர்நலங் கருதல் பேர்பெறற் கோர்வழி
வெறிதரு பவற்றை அறிவுளோ ரகற்றுவர்
வேத மோதார் வேதிய ராகார்
வைப்பெனப் படுவது மெய்த்தவப் பேறு
ஒருவனைக் கெடுத்துப் பெருநிதி பெறாதே
ஓா முரைப்பவர் ஊரைக் கெடுப்பர்
வாழுக உலகமெந் நாளுஞ் செழித்தே.

கா. சின்னப்பா, யாழ்ப்பாணம்.

---

## நல்லுரைத் திரட்டு.

(462-ம் பக்கத்தொடர்ச்சி.)

(171) ஒருவன் வயதாக, ஆக அமிதமான அறிவையும், அநுபவத்தையும் அடைந்து வருகிறான். (172) ஒரு ராத்தல் பட்டுக்கு இருபத்துமூவாயிரம் பட்டுப்பூச்சிகளைக் கொல்லவேண்டுமாம்! எனவே ஒருபட்டாடைக்கு எத்துணை ஆயிரம் பூச்சிகளைப் பலியிடவேண்டுமோ தெரியவில்லை. பல்லாயிரக் கணக்கான பூச்சிகளைப் பலியிட்டு அணியும் ஆடை அணிவோர் எத்தகைய அகிம்சா மூர்த்திகள்! (173) கலாசாலைப்படிப்பை முடித்துவிட்டதாலேயே ஒருவன் கலாவல்லுநனாகிவிடான்; "அநுபவ" க்கலையில் தேர்ந்தவனே கலா வல்லவனாவன். (174) அரசியல் துறையில் உழைப்பதிலும், ஆசாரச் சீர்திருத்

தத்துறையில் உழைப்பது பெரிதும் சமூகத்திற்குத் துணைபுரியவல்லதாகும். (175) "சுயாட்சி" என்பது ஒருவர் அளிக்க, மற்றொருவர் பெறுவதன்று; "பூவினில் கந்தம்பொருந்தியவாறுபோல்" அவரவர்பால் மருவி விளங்குவதாகும். (176) தீண்டாமை என்பது இந்துமதத்திலுள்ள ஓர் பெரும் வியாதி. (177) ஏழை மக்களே இவ்வுலகில் அருஞ்செயல்கள் புரிகிறார்கள். (178) "எல்லாம் நன்மைக்கே நிகழ்கிறது" என்பதை ஒவ்வொருவர் வாழ்விலும் துருவித் துருவி ஆராயின் அறியலாம். (179) "வெட்கம்" அமிதமாயுள்ளோரிடம் "ஞானம்" மிகுந்து கிடக்கும். (180) காரணமில்லாமல் காரியமில்லை. (181) மடமடவெனப் பேசுவோரிடம் அறிவு அதிகமில்லை; மௌனமாயுள்ளோரிடம் அறிவு அதிகமாயிருக்கிறது. (182) கிராமவாழ்வுக்கு ஒப்பாய வாழ்க்கை வேறு ஒன்றிலும் இல்லை. (183) பருத்தி நூற்கும் ராட்டையும், கைத்தறியையும் மறந்தமையே நாட்டின் வறுமைக்கு முக்கிய காரணங்களிலொன்று. (184) ஒருநாட்டார், மற்றொரு நாட்டாரை ஆளுதல் இயற்கைக்கும், ஆன்மநேயத்திற்கும் மாறுபட்டதாகும். (185) காதலி காதலரின் உடல்கள் பிரிந்திருந்தாலும், உயிர் பிரிந்திருக்கவில்லை. (186) "அகிம்சை" என்பது முற்றும் மாசின்றியிருத்தல். (187) எளிய சகோதரர்களை ஒடுக்கும் பாவத்தில் மூழ்கியிருக்குமட்டும் நாம் விலங்குகளைவிட உயர்ந்தவர்களல்ல. (188) ஆங்கிலக்கல்விமுறை, நம்மை, நம்நாட்டிலேயே அந்நியராக்கியிருக்கிறது. (189) எல்லா "மண"ங்களிலும் சிறந்தமணம் (விவாகம்) களவென்னும் "காதல் மண"மே யாகும். (190) இந்துமக்களாநாம் ஒவ்வொருவரும் நமது சகோதரன், அல்லது சகோதரி என்று கொள்ளும் பேராண்மையே "சுதந்திரம்" (191) ஒருநாட்டின் உண்மைநிலையை, அந்நாட்டிலுள்ள கோடீசுவரரின் தொகை புலப்படுத்தாது; அந்நாட்டிலுள்ள ஏழைமக்களுள் எத்துணைபேர் பட்டினி கிடக்கின்றனர் என்பது புலப்படுத்தும். (192) ஒருவன் தன்பால் உறுத்தெழும் *விலங்கு நசைகளை அடக்கவேண்டுமேல், முதலாவது அவன் நாநசையை அடக்குதல் வேண்டும். (193) இயந்திரம், மனிதனை அடிமைப்படுத்துகிறது. (194) தற்பெருமையுந் தன்னலமும் அற்றவிடத்திலெழும் உண்மையும், அஞ்சாமையும் மனிதனிடத்திலுள்ள ஆண்மையை எழுப்புகின்றன! (195) பிரதிபயன் கருதாது தொண்டாற்றுவோரே உண்மையான தொண்டராவர். (196) சனஊழியன் எச்சிறப்பையும் ஏற்றுக்கொள்ளலாகாது; அவன், தனக்குள்ள எல்லாவற்றையும் சனங்களிடத்தில் ஒப்புவித்தவன். (197) சிலவேளைகளில் கதரணிவதுமட்டும் சுதேசியமாகிவிடாது. (198) ஒருவன் அகிம்சா தர்மியாக விருக்கவேண்டுமானால், அவன், தனக்கு இன்னா செய்தவன்பால் சீற்றங்கொள்ளாதிருத்தல் வேண்டும்; அவன், இவனுக்குக் கனவிலுந் தீங்கு நினைத்தல் கூடாது; நன்மையே நினைத்தல் வேண்டும். (199) புகழுடம்பை வளர்த்தலும், நிலைபெறச் செய்தலும் அறிவிலார்க்கு அரிது.

திரு. வீ. மு. பொன்னையா.

---

* விலங்கு நசை=மாமிசாகாரப் பிரியம்.

## பொன் செய்யும் மருந்து.

(463-ம் பக்கத் தொடர்ச்சி.)

அப்பொழுது தான் வந்துகொண்டிருந்தான் பிரபு. இந்த வாசனையை உணர்ந்தவுடன் அவன் தன் அறைக்கு ஓடினான். அங்கே சுகுணன் பூவைக் கீழே வைக்குந் தருணத்திலிருந்தான். விஷயத்தைப் பிரபு அறிந்துகொண்டான். உடனே சுகுணனைக் கட்டிக்கொண்டான்.

"அப்பா உன்னிடத்திலுள்ள பொன்செய்யும் மருந்தைச்செய்ய எனக்குக் கற்றுக் கொடுக்கமாட்டாயா? என் ஆஸ்தியில் பாதியை உனக்கு நான் தருகிறேன்" என்று அதிக ஆவலுடன் கேட்டான்.

பாவம் சுகுணன் பயந்துவிட்டான். பிரபுவுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதோ என்று சந்தேகித்தான். பிரபுவோ மறுபடியும் அதே கேள்வியைக் கேட்டான். உடனே அவன் "என்னிடம் அப்படிப்பட்ட மருந்து ஒன்றும் கிடையாதே" என்றான். பிரபு அவன் பொய் சொல்லுகிறான் என்று நினைத்தான். மறுபடியும் மறுபடியும் அவனைக் கெஞ்சினான். சுகுணனும் அந்தப் பதிலையே சொன்னான்.

அந்தச் சமயத்தில் திடீரென்று ஸந்நியாசியும் வந்துவிட்டார். அவரிடம் பிரபு "இவனிடம் தாங்கள் சொல்லிய மருந்து இருக்கிறது. இவன் சொல்ல மாட்டேனென்கிறான்" என்றான்.

சுகுணனும் சந்நியாசியைப் பார்த்து "ஸ்வாமி! நான் இவர் அறைக்குள் இருக்கிறார் என்று நினைத்துவந்தேன். அங்கிருந்த தங்கமலரை எடுத்துப் பார்த்தேன். அதுவும் வாசனை வீசிற்று. பிரபுவும் வந்தார். பொன்செய்யும் மருந்து கேட்கிறார். எனக்கு அம்மருந்து தெரியாது. நான் என்ன செய்யலாம்" என்றான். சந்நியாசி "உனக்குத் தெரிந்த வேறு யாருக்காவது தெரியுமா?" என்றார். சுகுணன் "இதை நான் கேட்டதுகூட இல்லையே" என்றான். "அப்படியானால் நீ சொற்ப சம்பளத்துக்குத்தானே வேலை செய்கிறாய். எப்பொழுதும் சந்தோஷமுள்ளவனாக இருக்கிறாயே; ஏன்?" என்றார் சந்நியாசி. சுகுணன் "எனக்கு வேண்டிய செலவுக்குக் கடவுள் கொடுக்கிறார். அதாவது என் சம்பளம் என்வீட்டுச் செலவுக்குப் போதும். அதனால் எனக்கு அதிகப் பணம் இன்னும் வேண்டும் என்ற ஆசையாவது, இல்லை என்ற கவலையாவது கிடையா" என்றான். உடனே பிரபு சந்நியாசியை நோக்கி "ஸ்வாமி! இவன் தொட்டவுடன் மலர்மணக்கக் காரணம் என்ன?" என்று ஆவலோடு கேட்டான். சந்நியாசி சிரித்தார். பிரபு "என் ஐயனே! என் மனங்குளிர விஷயம் இன்னதென்று சொல்லலாகாதா? என் மனோநிலைமையைத் தாங்கள் அறியவில்லையா?" என்று ஆத்திரத்தோடும் அவரிடம் கெஞ்சினான்.

சந்நியாசி "சுகுணனிடமிருக்கும் **போதுமென்ற மனமே பொன்செய்யும் மருந்து**" என்று சொன்னார்.

இப்போதுதான் பிரபுவுக்கு உண்மை தெரிந்தது. அவன் சந்நியாசியை சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்தான். "ஸ்வாமி! நானும் இனிமேல் அதிக ஆசைப்படமாட்டேன். புத்தி வந்தது. 'உள்ளது போதுமென்ற மனமே குறைவற்ற களஞ்சியம்' என்று தெரிந்துகொண்டேன்" என்றான். சந்நியாசி தனவந்தனை நோக்கி "'செல்வமென்பது சிந்தையின் நிறைவாம்' என்பது நன்றாய்த் தெரிந்ததா?" என்று கேட்டார். பிறகு இன்னும் சில புத்தி மதிகளைக் கூறிவிட்டு அவனை ஆசீர்வதித்துச் சென்றார்.

பிரபு, அதன்பின், அதிக ஆசைப்படாமல் உள்ளதைக்கொண்டு திருப்தியோடும் ஸந்தோஷத்தோடும் வாழ்ந்து வந்தான்.

குழந்தைகளே! இப்பொழுது தெரிந்ததா அந்த மருந்து இன்னது என்று? அதுதான் "திருப்தி". இந்த மருந்து இருந்தால் நாமெல்லோரும் பெரும் பணக்காரர்களைப்போல ஸந்தோஷமாக விருக்கலாம். அதைச் சம்பாதிக்க முயற்சி செய்யுங்கள். சுபம்.

D. R. ஸ்ரீநிவாஸ அய்யங்கார், தேவகோட்டை.




## அவுரித் தொழில்.

(470-ம் பக்கத் தொடர்ச்சி.)

கைத்தொழிலுக்கும் விவசாயத்திற்கும் நெருங்கிய சம்பந்தமுண்டு. வஸ்திரத்தை உற்பத்திசெய்யும் கைத்தொழிலுக்கு அவ்வாடைக்கான பருத்தி விவசாயம் முக்கியமாகின்றது. கைத்தொழிலாளர் பருத்தியைக் கொண்டு நூல் நூற்றுத் தறியிலிட்டு ஆடையாக்கியபின், அதற்குச் சாயமேற்றுதலென்னுங் கைத்தொழில் பின்பு கொள்ளப்படுகின்றது. ஆகவே உடுக்கும் உடை மனிதனுடைய முக்கிய தேவைகளில் முதன்மையானதென்பதைமட்டுங் கூறி அவ்வாடைக்குச் சாயமேற்றுங் கைத்தொழிலின் அபிவிருத்தியை ஆராய்வோம்.

சாயத்தொழிலுக்கு அவுரி விசேஷமான உதவிபுரிகின்றது. நீலநிறத்தைத் தரக்கூடியதற்கே அவுரியென்று பெயர். அதில் சுமார் 250 முதல் 300 வகை நீலிகளிருக்கின்றன. அவுரி பெரும்பாலும் உஷ்ணமான பிரதேசங்களிற்றான் விளையும். இந்தியாவின் மேற்குப்பாகத்திலேயே அவுரி அதிகமாக உற்பத்தியாகின்றது. ஆங்குப் பலவகை அவுரிச் செடிகள் காணப்படுகின்றன. அவற்றை விளைவிக்கும் முறைகளும் சிறிது வேறுபடுகின்

றன. இந்த அவுரியை ஐரோப்பியர் முதல் முதலாக இந்தியாவிற்கு வியாபாரமிமித்தம் வந்தகாலத்தில் இந்தியநாட்டின் மேற்குப் பிரதேசங்களிலிருந்தே ஏற்றுமதிசெய்து சென்றனரெனவும் போர்த்துகேசியர் இந்தியாவிற்கு வந்தகாலையில் சூரத் (Surat) என்னுந் துறைமுகத்திலிருந்து லிஸ்பன் பட்டினத்திற்கு ஏற்றுமதிசெய்து அங்கிருந்து டச்சுக்காரர்களுக்கு இந்நீலியை விற்றுவந்தனரெனவும் ஆதாரங்கள் காணப்படுகின்றன. பின்னர் டச்சுக்காரர்கள் நேராகவே அவுரியை இந்தியாவினின்றும் கொள்முதல் செய்து பெயரொன்று புனைந்து டச்சுத் தென்னிந்திய கம்பெனி என்ற பெயருடன் 17-ம் நூற்றாண்டில் வாணிபஞ் செய்து வந்தனர். இதனால் டச்சுக்காரர்களுக்கும் போர்த்துகேசியர்களுக்கும் மனஸ்தாபமேற்பட்டுப் பின்னர் டச்சுக்காரரின் வலிமை பெரிதாக அவர்கள் தம் வியாபாரத்தைத் தொடர்ந்து நடத்திவந்தனர். இதனால் உள்நாட்டில் அவுரி விவசாயம் அதிகரித்து வந்தது. 18-ம் நூற்றாண்டின் ஆரம்பகாலத்தில் மேற்குத் தீவுகளில் மேல்நாட்டுக் கம்பெனிக்காரர்களுக்குள் சச்சரவு அதிகமாகி அவர்கள் புண்யம் குன்ற வாரம்பிக்கவே உள்நாட்டில் அவுரித்தொழிலுக்கு நாசகாலமேற்பட்டது. அக்காலத்தில் அவுரி விவசாயஞ்செய்ய வங்காளமே தக்க பூமியென விவசாய நிபுணர்கள் கூறினர். அதற்கிணங்க வங்கநாட்டில் அவுரி விவசாயமும் செய்யப்பட்டுவந்தது. அங்கு அரசாங்கத்தார் வரிவிதித்தும், வம்பாடியும் அவுரித்தொழிலை நசுக்க யத்தனிக்க, தொழிலாளருக்கும் அரசாங்கத்தாருக்கும் மனக் கசப்புண்டாகி வங்காளத்தில் அவுரி உற்பத்தி குன்றிற்று. அதன்பின்னர் பீர்ஹாட், ஐக்கியமாகாணம் முதலான இடங்களில் உள்ளார் இத்தொழிலை யாரம்பித்தனர். அவுரி யேற்றுமதி நின்றுபோகவே மேல்நாட்டு ரசாயன நிபுணர்கள் 1897-ல் அவுரியின்றியே நிலக்கரிபோன்ற பொருள்களிலிருந்து நீலச்சாயத்தைச்செய்யும் புதியவழியைக் கற்பித்தனர். இதனால் ஏற்றுமதி குன்ற அவுரி விவசாயமும் கெட்டுப்போயிற்று. சில ஆண்டுகள் செல்ல 1914ல் மகாயுத்தம் ஆரம்பமானபோது நிலக்கரியின் பருவவிலை மேல்நாட்டில் மிகவும் அதிகரித்ததினாலும், நிலக்கரியகப்படுவது அரிதாயிருந்ததாலும் அவுரியேற்றுமதியை மேல்நாட்டார் இந்தியாவிலிருந்து எதிர்பார்த்தனர்.

மீண்டும் அவுரி உற்பத்திக்கு அவசியமேற்பட்டதால் இந்தியாவில் அவுரித்தொழில் சிறிது விருத்தியடைந்தது. 1922-ம் ஆண்டில் இந்தியாவில் 296, 800 ஏகர் நிலத்திலிருந்து 81, 500 மணங்கு எடையுள்ள நீலம் உற்பத்தி செய்யப்பட்டது. அவ்வாண்டில் சென்னை மாகாணத்தில் 149, 600 ஏகர் விஸ்தீரணமுள்ள நிலங்களிலிருந்து 54, 000 மணங்கு நீலி விவசாயஞ் செய்யப்பட்டது எனக் கைத்தொழில் மாசிகை கூறுகின்றது. நீலியின் விளைவு நமது இராஜதானியில் அதிகமேயாயினும் அவை உயர்ந்தனவாயில்லை. மற்றும் சிறுபூமியுடைய பலரால் அவுரி பயிரிடப்படுகின்றது. பீகார், ஓரிசா பிரதேசங்களில் மிகவும் உயர்ந்த ரகமான அவுரி மிக்க குறைந்த அளவினதாக உற்பத்தியாகின்றது. இந்த அவுரித்தொழிலைப் பல்வகையிலும் விருத்தி

செய்ய விவசாய இலாகா தலைவர்கள் பெருமுயற்சி எடுத்து வருகின்றனர். ஆனால் யுத்தம் முடிந்துபோனதால் ஜர்மானியர் அதிக ஊக்கத்துடன் தமது புதுமுறை (செயற்கை) நீலியை (சாயத்தை) ஏற்றுமதி செய்வதால், வியாபாரமுகத்தில் இயற்கை அவுரித்தொழிலுக்கு அத்துணைச் செல்வாக்குண்டாகுமோவென்ற சந்தேக மேற்படுவதால் அதன் எதிர்கால நிலையை நிச்சயமாகக்கூற இயலவில்லை.

"தென்னாற்காடுஜில்லாவில் பல கிராமங்களிலும், வட ஆற்காட்டில் குடியாத்தம், அரக்கோணம், வாலாஜா தாலூக்காக்களிலும், செங்கற்பட்டு ஜில்லாவில் திருவள்ளூர், சைதாப்பேட்டை, காஞ்சீபுரம் முதலான பக்கங்களிலும், சித்தூர் ஜில்லாவில் திருத்தணி, புத்தூர் பிரதேசங்களிலும் இன்னும் பாழடைந்துபோன பழங்காலச் சாயத்தொட்டிகள் காணப்படுகின்றன. இதினின்றும் முற்காலத்தில் மேற்கூறிய இடங்களில் அவுரித்தொழிலதிகம் விருத்தியடைந்திருந்ததென ஊகிக்கலாம். மேலே குறிப்பிட்ட ஊர்களில் இப்போதும் நெற்பழனங்களுக்கிடும் எருவிற்காக நீல உற்பத்தி சிறிது நடந்து வருகின்றது. தொழில் நிபுணர்கள் பலரும் அக்கிராமங்களில் காணப்படுகின்றனர். அவர்களை உதவியாகக்கொண்டு அத்தொழிலுக்குப் புனர் உத்தாரணமளித்தல் சாலச் சிறந்தது" என்று கனம் மேட்டா என்ற டிப்டி விவசாய டைரக்டர் சில ஆண்டுகளுக்கு முன்னர் பிரஸ்தாபித்தார். அதன்பயனை விதை விற்றல், விதை சேகரித்தல் முதலிய விஷயங்களில் அரங்கத்தார்கள் தக்க முயற்சிகொண்டுள்ளார்கள். ஆதலால், அவுரித் தொழிலை யதிகப்படுத்துவதற்கான தக்க வழியை அத்தொழிலாளிகள் கைப்பற்றுவார்களாக.

ஸ்ரீ தரன், திரிசிரபுரம்.




## வணிகருக்கோர் வசன விருந்து.

(ஸ்ரீ கிருஷ்ணதாஸன் எழுதியது.)

செல்வத்தில் மிக்க எந்நாட்டிலும் வணிகரின் தொகை அதிகரித்து நிற்கும். வாணிபத்திலேயே தேசங்கள், ராஜாங்க அமைப்பிலும், கல்வியிலும், பொருளிலும் படைகளிலும் சிறக்கின்றன. அத்தகைய தேசங்களில் நகரபரிபாலன சபைகளிலும், பாராளும் மன்றங்களிலும் பண்புடன் வியாபாரிகள் அதிகரித்துநின்று ராஜ்யபாரத்தை நிர்வகிக்கின்றனர்; மந்திரி பதவிகளையும் பெறுகின்றனர். தொழிலும் வியாபாரமும் நெருங்கிய சம்பந்தமுடைத்தாயிருத்தலின் தொழிலிற் சிறந்த நாட்டின் மக்கள் கல்வியும்—

நாலும் பொருந்தியிருக்க தேசத்தைத் தம்வழி திருப்பிவிடுகின்றனர். அமெரிக்கா, இங்கிலாந்து, ஜப்பான் போன்ற வியாபாரப் பெருக்குடைய நாடுகளின் ஒவ்வொரு அரசாங்கச் சிறு சபையிலும் வியாபாரிகள் பெரும்பான்மையராகி நின்று தமக்கான வாணிபத்துறையில் அவசியமான சீர்திருத்தங்களைச் செய்துகொள்ளுகின்றனர். இங்கிலாந்துபோன்ற நாடுகளிலுள்ள வியாபாரக்கக்ஷியினர் இந்தியாபோன்ற தேசங்களை வியாபார தந்திரங்களாலடிமையாக்கிப் பாழுமிரும்பாலான பலவிதப் பண்டங்களை நமக்குக் கொடுத்துவிட்டு, பணத்தில் குறியுடையவர்களாக நம்மைப் படுகுழியிற் றள்ளிவிடுதலே போதிய சான்ருகும். சுமார் இருபதாண்டுகட்கு முன்னர் இருந்த இடந்தெரியாதிருந்த ஜப்பான்—அப்பா! இங்கிலாந்தின் முறையைக் கையாண்டு, ஆடை முதற்கொண்டு க்ஷவரக்கத்திவரையில்—கொண்டையூசி முதல் கோக்கும் ஊசி ஈருக—அனைத்தையுஞ் செய்யத்தொடங்கி இருபதாண்டுகளுக்குள்ளாக இந்தியநாட்டிலிருந்து பணத்தைச் சம்பாதித்துக்கொண்டு 'பணத்திலும் சைந்நியத்திலும் உயர்ந்த ஜப்பானுகிவிட்டது. நம் நாடோ "கிளாஸ்கோ மல்! ஆம் அது நேர்த்தியாக இருக்கின்றது! ஜப்பான் சிலிப்பர்! அது சொகுசுதான்!" என்று வாய் டம்பத்தோடு கண்டதே காக்ஷி, கொண்டதே கோலமென்ற கொள்கையுடன் திருப்தியடைந்து கதராடையென்றால் உதறித்தள்ளும் நிலையிலிருக்கின்றது. இதனுற்றான் இந்தியநாட்டின்மேல் மேல்நாட்டாருக்கு அதிகப்பிரியம். ஏன்? நாம் ஏமாந்தவர்களாவதால், "ஏமாறுவாரைக்கண்டால் ஏமாற்றுவாருக்குக் குதூகலம்" என்பதும் பழமொழி. இதினின்றும் மீள வழியுண்டோ? உண்டு. ஆனுல் காந்தியடிகள் அனுபவபூர்வகமாகக் கூறியதுபோன்று நாம் "நெல்லிக்காய் மூட்டை" போன்று மனவுறுதியும், நூதன வுணர்ச்சியுமின்றி பழயஞாபகத்துடனேயே பழகும் குணமுடனிருப்பின் என்றும் மீளவியலாது. திருந்தக்கூடிய மனமுண்டானுல் வழியுமுண்டு.

முதலாக இருக்கும் நிலைமையை விளக்கிப் பின்னர் மீளும் வகையைக் கூறுவாம். நமதுநாட்டில்—அதிலும் தென்னாட்டில் வியாபாரிகளிடம் கல்வி பொருந்தியிருப்பது மிகவும் துர்லபமாயிருக்கின்றது. கல்வி பொருந்தியிருப்பவர்கள் வியாபாரஞ் செய்யத் தொடங்குதல் தாழ்வென்பது நவீன பாதாள சங்கத்தாரின் தீர்மானம். வாசிப்பில்லாத வியாபாரிகள் தமது தந்தை முதலானோர் செய்துவந்த வகையில் ஏதோ படித்த பாடத்தையே படித்துக்கொண்டு, மேற்பாடமாகிய வியாபாரவிருத்தியைக் கருதாதொழிகின்றனர். இவர்களிடம் பணம் அகப்பட்டுக்கொண்டு விழிக்கின்றது. சில வியாபாரிகள் நூற்றுக்கு இரண்டுவீதம் வட்டிவாங்கிப் பொருளீட்ட முற்படுகின்றனரேயன்றி வியாபாரத்துறையில் பல சீர்திருத்தங்களைச் செய்தற்கு முன்வர இயலாதவர்களா யிருக்கின்றனர். படிப்பில்லாத குறையால் சட்டசபை, நகரபரிபாலனம் முதலானவற்றைப் பொறுத்த விஷயங்கள் அவர்களுக்குப் புலனுவதில்லை.—ஆகவே அவற்றில் ஊக்கமுமில்லை. சட்டையணிந்தவரைக்கண்டால் பயந்து எட்டிச் செல்லும் பல வியாபாரிகளும் தென்னாட்டிலுளர். இவர்களுக்கு ஒரு

ஜாக்கிர நிலைமட்டு முண்டு. அதாவது "வரியை உயர்த்திவிட்டார்கள்" என்பதுமட்டுமே! ஏன்? கைப்பணம் பையினின்று வெளிப்படநேர்வதா லந்த விழிப்பு! அவ்வரி விதிக்கப்பட்டது யாரால் (தம் அஜாக்கிரதையால்—கவனக்குறைவால்) என்பதை இவர்கள் சிந்தியாது, வரிப்பணம் கொடுத்த வாரத்திற்குப்பின் தமது பழய வழியையே பின்பற்றி நடக்கின்றனர். இது இவர்களுடைய சுபாவம். வியாபாரிகளில் இரண்டொருவர் சிறிது கல்வி யறிவு பெற்றவராயிருந்து நாட்டின் நிலைமையை எடுத்துக் கூறுவார்களாலுல், அவர்களை "விதண்டாவாதிகள்—இது ஒரு சந்தைக்கூட்டம்" எனப் புகன்று வெறுக்கின்றனர். இந்நிலையிலுள்ளார்க்குத் தேசாபிமானமும் பாஷாபிமான மும், மதாபிமானமும், பத்திரிகாபிமானமும் கிடையா. இதனுல் வியா பாரத்தாழ்வின் பூர்வோத்தரமும், தற்கால நிலைமையும் விளக்கமாம்.

இனி, 'போனது போக புதியதுதானென்ன புகலுவீரே' என்றவாறு நமது கடமை யென்னவென்பதைக் கவனிப்போம். இனிமேல் வியாபாரி கள் படிக்கக் கற்றுக்கொள்வதும் சாத்தியமில்லை. ஆனுல் இவர்கள் தம் பிள்ளைகளை அக்ஷராப்பியாசமான ஆறுவது மாதத்தில் "பையனுக்குத் தன் பெயரை எழுதத்தெரிந்துவிட்டது—படித்ததுபோதும்—இவன் கடையைக் கவனிக்கட்டும்"—என்ற வழக்கத்தைவிட்டுத் தமது பிள்ளைகள் பூரணகல்வி யைப் பெறும்வரையில் கல்விகற்கவிடவேண்டும். படித்துத் தேர்ந்தவர்கள் தங்கள் தாழ்மையுள்ள (Your most obedient servant) என்ற உத்தியோக விருப்பப்பத்திரத்தை அதிகாரிகளிடம் கொண்டு செல்ல,அவர்கள் வெறுப்பு டன் வேலை காலியில்லை(No vacancy)என்று கூறும் பரிதாப நிலையைவிட்டு, அதைவிட வியாபாரம் சிறந்ததென்றெண்ணித் தமதுகல்வியறிவைக்கொண்டு நம்நாட்டு வாணிபத்தை விருத்திசெய்ய முற்படவேண்டும். வியாபாரத்தில் பண ருசிகண்டவர்கள் பணப்பேயாகி வட்டிவாங்கிப் பெட்டியிற்போடும் வழக்கத்தை நீக்கிப் பல புதுக் கைத்தொழிற்சாலைகளை நிறுவிப் பாடுபட வேண்டும். வியாபாரிகள் சட்டசபைகளிலும், நகர பரிபாலன சபைகளிலும் பொதுமக்களின் ஆதரவுபெற்று அங்கத்தினர்களாகி, அவர்களுக் கிடையூருக நிற்கும் தலையாட்டிப் பொம்மைகளை விலக்கி வாணிபவிருத்திக்கான வசதி களைச் செய்துகொள்ளவேண்டும். மற்றும் நம்நாட்டின் மீட்சியைக்கருதி வியாபாரத்துறையிலும் இதரத்தொழில் வழிகளிலும் பாடுபடும் தேச பக்தர்களை இவர்கள் ஊக்கி அவர்களுக் குதவிபுரியவேண்டும். தேசத்தின் முன்னேற்றத்திற் கொப்பற்ற துணையாகும் பத்திரிகாபிமானம் இவர்க ளிடம் பொருந்தியிருக்கவேண்டுவெதும் மிக்க அவசியம். இவ்வசனவிருந்து வியாபாரிகளின் காதில் ரீங்காரம் செய்து அவர்களைத் தட்டி எழுப்புதலான் அவர்கள் இனியும் செவிடர்களாகி நில்லாது,உணர்ச்சி பெற்றெழுந்து நாட்டி னிடத்துக் கருணைபூண்டு ஆண்டவனைப்போற்றி அவற்றை அனுசரிக்குமாறு இறைஞ்சுகின்றோம். இது ஓரின்ப வசன விருந்தாகுக.

———

## பூர்வகால நாடகங்கள்.

நடிக்கப்படுவது நாடகம். நாடகம் ஜனசமூகத்தின் உயர்ந்த நாகரீகத்தின் ஓர் அம்சமாகும். மனிதர்கள் ஆடை யணியவேண்டுமென்ற உணர்ச்சி பெற்றதற்கு, வெகுகாலத்திற்கு முன்னரிருந்தே நாடகத்திலவர்களுக்குப் பிரேமை யுண்டென்பதால் நாடகத்தின் தொன்மை நன்கு விளக்கமாம். முற்கால அநாகரீக மக்களும் அக்கால மனப்பான்மைக்கும், உலகப் போக்கிற்கும் தக்கவாறு நாடகம்போன்ற கேளிக்கைகளில் சிறிது காலத்தைக் கழித்துவந்தனர். நாடகமானது தற்காலத்தில் பற்பல துன்மார்க்க, பிரயோஜனமற்ற கொள்கைகளுடன் நடைபெற்றுவரினும், மனிதனுக்கு நல்வழியைப் போதிக்கும் பல மார்க்கங்களுள் நாடகம் சிறந்ததென்பது அறிஞர்களி னபிப்பிராயம். ஒரு கதையை வாசிப்பதாலும், கேட்பதாலும் பொதுவாக நல்வழிப்படுவோர் வெகு சிலரேயாவர். இவர் விசேஷ ஞானத்மாக்களாயிருப்பர். ஆனால் ஒரு கதையைக் கேட்பதாலும், படிப்பதாலும் மனிதருள்ளத்தில் ஓர் நீதி பற்றுவதைவிட, சாமார்த்தியசாலிகளான சிறந்த நடிகர்களைக்கொண்டு நீதியைப் புகட்டும் முக்கிய கருத்துடனே நடைபெறும் நாடகங்களைக் காண்பதால் சுலபத்திலவர் நல்வழிப்படுகிறார். கண்ணாரக்கண்ட காக்ஷி அவர்களுடைய சித்தத்தைப் பரிபக்குவப்படுத்திவிடுகின்றது. இந்தவகையில் நாடகம் சிறந்ததென்பதுதான் நாடககர்த்தாக்களின் தாத்பரியம்.

நாடகமானது நாட்டியத்தினின்றும் தோன்றிற்று. அந்த நாட்டியத்துடன் சங்கீதம் சிறிது கலந்தது. அதன்பின்பு நாட்டியத்துடனும் சங்கீதத்துடனும் இலக்கியமும் சிறிது சேர்ந்தது. நாட்டியமும், சங்கீதமும், இலக்கியமும் சிறு கதைகளுமாக 'நாடகம்' ஆயிற்று. நாடகம், எந்தப் பாரதநாட்டிலே முதல் முதலாக சமயாசாரமும், சன்மார்க்கமும், ஞானமார்க்கமும் தோன்றினவோ அதே பாரதபூமியிற்றான் ஆரம்பமாயிற்று. மேல்நாட்டில் கிரிஸ்துநாதர் தோன்றியகாலத்திற்கு பல்லாண்டுகள் முற்பட்ட பூர்வீக கிரந்தமான சம்ஹிதைகளும், இதிஹாசங்களும், பாணினி, பதஞ்சலி முதலான முனிவர்களின் இலக்கண காவியங்களும் இந்தியநாட்டின் நாடகத்தை விளக்க ஆதாரங்களாகின்றன.

பாரத நாட்டின் பூர்வகால நாடகங்களைப்பற்றி ஆராய்ச்சி செய்வோர்க்கு பரத நாட்டிய சாஸ்திரமே முக்கிய ஆதாரமாயிருக்கின்றது. இந்நூலானது ஆக்கியோன் பெயரை முதலிற்கொண்டு, பரதனாற் செய்யப்பெற்ற நாட்டியம் பரதநாட்டியமெனப் பொருள்படும். இதில் இந்திரனுக்குப் பட்டமளிப்பு விழாவில் தேவர்களால் நடிக்கப்பெற்ற நாடகத்தைக்கண்ட தானவர்கள், அந்த நாடகத்தில் தானவரின் வீழ்ச்சி விசேஷமாக நடிக்கப்பெற்றதால் மனந் தளர்வுற்றமையைக்கண்ட பிரமதேவர், அவர்களை நோக்கி, "தானவர்

களே! இந்த நாடகம் தங்களுக்காவது தேவர்களுக்காவது இன்ப துன்பங்களைக் கற்பிக்க நடிக்கப்பெற்றதல்ல. உலகபாவத்தை யுணர்த்தவே இந்த நாடகம் நடைபெற்றது. உலகப்போக்கிலுள்ள கஷ்டத்தையும், சுகத்தையும், இன்பத்தையும், துன்பத்தையும், வியப்பையும், பயத்தையும், நகைப்பையும், கண்ணீர்வடித்துப் புலம்பலையும் பிரத்தியக்ஷமாக நடைபெறுவதுபோல் காட்டி அதன்வாயிலாக நிவர்த்திமார்க்கத்தை யுபதேசிப்பதே முக்கிய நாடகக் கருத்து. நாடகத்தைக் காண்பதால் கொடுங்கோல் மன்னனது வீழ்ச்சியையும், கபடசித்தமுடையவன் படுங்கஷ்டத்தையும், பதிவிரதாசிரோமணிகளைக் கற்பழிக்கும் பாவிகள் படும்பாட்டையும் லோகத்தார்கண்டு நல்வழிப் படுவர்; இதனால் பலஹீனன் வீரியத்தையும், யுத்தவீரர்கள் தைரியத்தையும், அறியாமையை யுடையவன் விவேகத்தையும், வித்வான்கள் தீக்ஷண்யத்தையும், அன்பிலாமன்னன் அறவழியையும், மனத்தளர்ச்சியுற்றவன் மனவலிமையையும் அடைகின்றனர். நாடகம் மக்களுக்கு சமயோஜிதமாக புத்திசொல்லும் அமைச்சனைப் போன்றது. துயரம், துன்பம், விசனம் முதலானவற்றை அடைபவருக்கு நாடகம் அவற்றைப்போக்கி நல்வழிப்படுத்துந் தன்மையதாகும். நாடகத்தில் தேவர்களும், பிரம்மரிஷிகளும், மன்னர்களும் கலந்திருப்பார்கள். உலக சுபாவத்தை அதனுடைய இயற்கையிலே நடைபெற அபிநயிப்பதே நாடகமாகும். நாடகத்தால் ஜனங்கள் வேதங்களையும், ஞானார்த்தங்களையும், சரித்திரத்தையும் நிதரிசனமாகக் கண்டுகளித்து நல்வழிப்படுகின்றார்கள்'' என்று கூறியதாக விளக்கப்பட்டுள்ளது.

மற்றும் பரதநாட்டியத்தின் முதல் அத்தியாயத்தின் முதற்பகுதியில் திரேதாயுக ஆரம்பத்தில் பிரம்மதேவரை, தேவர்கள் வேண்ட, அவர்கள் வேண்டுகோளிற் கிணங்கி பிரம்மதேவர் நாட்டியசாஸ்திரத்தைச் செய்தருளினரென்பது கூறப்படுகின்றது. அது பின்வருமாறு.

"கிருதயுகத்தில் பிரம்மதேவர் தவஞ் செய்துகொண்டிருந்தார். அப்பொழுது வைவச்சுதமனு திரேதாயுகத்திற்கான தர்மங்களைக் கணித்துக்கொண்டிருந்தார். கிருதயுகத்தின் முடிவில் தர்மம் குன்றி, அதர்மம் மேலிட்டு, பொறாமையும், ஹிம்சையும் அதிகரித்து நின்றன. அது சமயம், தேவர்கள், தானவர்கள், காந்தர்வர்கள், யக்ஷர்கள், இராக்ஷசர்கள், கின்னரர், கிம்புருஷர், மஹோரகர்கள், லோகபாலர்கள் முதலானோர் ஜம்பூத்வீபத்தை யடைந்தார்கள். அப்போது இந்திரன் முதலான தேவர்களெல்லாம் பிரம்மதேவரை நோக்கி "வேதங்கள் பிராமணர்களால் மட்டும் கொள்ளத்தக்கனவாயிருப்பதாலும், அவற்றை மற்றவர்கள் சிந்திக்க அநருகராயிருப்பதாலும், பரோபகாரார்த்தமாக சகல ஜனங்களுக்கும் பயனுமாறு ஐந்தாவது வேதமொன்றை யருள வேண்டு''மென்று வேண்டினர். சகலகலா வல்லபரான பிரம்மதேவர் அதற்கு ஒப்பி, நிஷ்டையிலமர்ந்து நான்கு வேதங்களையும் ஒருமுறை சிந்தித்து, தர்மங்களை அறிவுறுத்தக்கூடிய புராணச்சரித்திரங்களை, ஞான

மார்க்கத்தைப் புலனுக்கும் வகையில், சாதகமான நான்கு வேதங்களிலுமுள்ள சிற்சில பாகங்களைக்கொண்டு ஐந்தாவது வேதமான நாட்டிய சாஸ்திரத்தை யருளினர். ரிக் வேதத்திலிருந்து வசனத்தையும், சாம வேதத்தினின்று சங்கீதத்தையும், யஜுர் வேதத்திலிருந்து சமிக்ஞையையும், அதர்வண வேதத்திலிருந்து உருக்கம், உணர்ச்சி, ரசம், ராகம், பாவம், மனோவிகாரம் முதலானவற்றையும் அதில் அமைத்தார். இத்தகைய அமைப்பைக்கொண்டே நாட்டிய அலங்காரசாஸ்திரம் ஐந்தாவது வேதமாகப் பிரம்மதேவராலாக்கப்பெற்றது.

(தொடரும்.) குக்குடநகர், ஆத்மநாதன்.




## சித்த வைத்திய சங்கமும் முப்பூவும்.

(471-ம் பக்கத் தொடர்ச்சி.)

சென்ற ஏப்ரல் மாதம் 10-ம் தேதியிலிருந்து 14-ம் தேதிவரையில் மதுரை திருமலை நாய்க்கர் மாலில் சித்தவைத்திய கான்பரன்சு நடந்தது. அதற்கு இவ்வருடம் முதல் முதலாக ஒரு நண்பரின் வேண்டுகோளுக்கிணங்கி நான் செல்லலாயினேன். மேற்படி சங்கமானது பொதுச்சங்கமென்று எண்ணியே அவ்விடம் சென்றேன். சென்றவிடத்தில் அச்சங்கமானது விருதை சிவஞானயோகிகளின் சங்கமாய் அவர் ஒருவராலேயே தமது சுய நலங்கருதி நடத்துவதாகத் தெரிந்தது. ஆனால், சித்தவைத்திய சங்கமெனப் பொது உரிமை வாய்ந்ததாய், வேறு சங்கமில்லாததால் பட்டம்பெறப் பிரியப்படும் வைத்தியர்கள் அநேகர் வேறு வழியின்றி இச்சங்கத்தில் பட்டம் பெற ஆவலுடன் வந்திருந்தார்கள். அச்சங்கத்தில் 11-ம் தேதி காலையில் ஒரு நண்பர் யோகசாதன சம்பந்தமான சில விஷயங்களைக் காட்டத் தொடங்கி ஆசனத்தின் வழியாக ஜலத்தை இழுத்து மலப்பையைச் சுத்தித்தல், காற்றை இழுத்துச் சுத்தப்படுத்தல், நாசித்துவாரங்களில் கயிற்றை விட்டு வாயின்மூலமாய் வாங்கிச் சுத்தப்படுத்தல் முதலியவற்றைக் காட்டினார். அவை பார்க்கத்தக்கவை; நோயணுகா விதிகளின் முக்கிய அம்சங்களாய் கருதவேண்டியவை. இவை தவிர மற்ற விஷயங்கள் நடந்ததில் அநேகமாய் ஒவ்வொருவரும் முப்பூ முப்பூ என்று பிரசங்கம் செய்தார்கள். அம்முப்பூ என்பது வந்திருந்த ஒருவருக்காவது அனுபவசித்தமென்பது தெரியவில்லை. ஆனாலும் சித்தர்கள் பாட்டையும், அவரவர்களுக்கு விளங்கிய அர்த்

த்தையும் கொண்டு அவர்கள் பலமாதிரியாகப் பேசினார்கள். அப்பேச்சைக் கேட்டவர்களுக்கு அது அற்புதமான மருந்தாய்த் தோன்றிற்று; ஆயினும் விவகாரத்தில் அதைச் சொல்லியவர்களுக்கும் கேட்டவர்களுக்கும் ஒரு பலனும் கிடைக்கவில்லை.

முப்பூ என்பது பிரத்தியக்ஷமில்லாத விஷயமாதலால் அதன்பேச்சு வீண்பேச்சென நான் நினைக்கின்றேன். ஒவ்வொருவருக்கும் முப்பூ முடிக்க வேண்டும், மரணமில்லாமல் உலகில் நீண்டகாலம் வசிக்கவேண்டும், பொன் பண்ணக் கற்கவேண்டும் என்னும் எண்ணமே அதிகரித்திருந்தாலும், வீணாய் அதைப்பற்றிப் பன்னிப் பன்னிப் பேசிமாள்வதில் பயனென்? தற்சமயம் தேசத்திற்கு வேண்டிய விஷயங்கள் பல; பண்டைய சித்த வைத்தியத்தை எங்கும் வியாபிக்கச் செய்யவேண்டும்; குறைந்த செலவில் பரந்த உலகிலுள்ள ஜீவகோடிகளுக்கு உண்டாகும் வியாதிகளை நிவர்த்திக்கவேண்டியனவும், வியாதி வரவொட்டாது தடுத்துக்கொள்ளக்கூடியனவுமாகிய முக்கிய விஷயங்களை வைத்தியர்கள்கூடிப்பேசவேண்டும்; வியாதிகளுக்கு அவரவர்களால் கையாளும் அனுபவ மருந்துகளைப் பலர்க்கு முணர்த்திப் பலரும் உயர்ந்த வைத்தியர்களாகுமாறு செய்யவேண்டும்; நோய்களைக் கண்டுபிடிக்கும் மார்க்கங்களையும், அந்நோய்களின் காரணங்களையும், பலருமறிய உபந்நியாசித்து நோயணுகா விதிகளைப் பரவச்செய்யவேண்டும். இவற்றை விட்டுவிட்டு இவர்கள் முப்பூவின் பெருமையைப் பேசியும், தங்களால் தயார்செய்யப்பட்ட மருந்துகளைச் சிவஞானயோகிகளிடம் காண்பித்துப் பணமும் கொடுத்து மெடல்கள் வாங்கியும் பாமரர்களை ஏமாற்றிப் பணம்பறிக்கச் செய்த வேலையானது எவ்விதத்திலும் உலகிற்கு நன்மையை உண்டுபண்ணாது. இதனைச் சகலரும் உணர்க. இன்னும் அநேகர் தற்காலத்தில் உபயோகமற்ற சில மருந்துகளை வைத்துக்கொண்டு பலரிடம் சென்று, பணம் கொடுத்து நன் மதிப்புப்பத்திரம் வாங்கிக்கொண்டு, 'சித்தர் தந்தபஸ்பம்' 'முப்பூ பஸ்பம்' 'குருபஸ்பம்' என்று பல பெயர்கள் சூட்டிப் பேபர்களில் பிரசுரித்து 10முதல் 30, 40 ரூபாய் வரையில் அவற்றிற்கு விலை ஏற்படுத்திப் பிணியாளரிடம் பணம் பறிக்கின்றார்கள். அத்தகைய பிரசுரங்களைக்கண்டு எவரும் ஏமாறக் கூடாது. இதனைச் சகலரும் அறியவேண்டும். அடுத்த சஞ்சிகையில் முப்பூ என்றது எவ்வகையில் சிறந்தது என்பதையும், முப்பூ இல்லாமலே காயத்தை எப்படிச் சுலபமாய் நீடித்திருக்கச் செய்யலாம் என்பதையும்பற்றி ஒருசிறிது எழுதத் துணிந்துளேன்.

நிற்க, பொதுவாக உலகநன்மையைக் கோரும் ஒவ்வொரு சித்த வைத்தியரும், சித்தவைத்திய சங்கமானது ரிஜிஸ்டர் செய்யப்பட்டதா? அன்றியும் கணக்குப் பரிசோதகர்களால் அதன் வரவு செலவு கணக்குகள் பரிசோதிக்கப்பட்டனவா? பலரால் பிரதிவருஷமும் அதற்கு அமைச்சர் முதலானவர்கள் தெரிந்தெடுக்கப்படுகின்றார்களா? சங்கப்பணம் ஒருவராலும் கையாளப்படாதபடி சட்டம் அமைந்துளதா? எல்லா இந்திய காங்கிரஸ் சபைகளைப்

போல் இச்சங்கமும் அமைந்ததா? என விசாரித்தல் வேண்டும். அப்படியில்லையேல் அதன் முகதரிசனமும் செய்யக்கூடாது. அதனால் நாம் பெறும் நன்மதிப்பும் பயன்படாது. அதைத் தழுவி நடப்போமானால் சித்தவைத்தியத்தைக் கொலை செய்தவர்களாவோம். இது தவிர மேற்படி சங்கத்தில், "திருவள்ளுவர் பஞ்சரத்தினம் 500" என்னும் புஸ்தகம் ஒன்றைப் பார்வையிட்டேன். அப்புத்தகத்தில், திருவள்ளுவர் வகுத்தருளிய ஞானவெட்டி முதலிய நூற்களுக்குத் திறவுகோல் என்பது காணப்பட்டது. இதுதவிர இது பலபேர்களால் பலநாள் தேடிய நூலென்றும், வெகு சிரமத்துடன் உலகோபகாரமாக வெளியிடப்பட்டதென்றும், சித்தர்நெறியில் பழகுவோர்களுக்கு ஒப்பற்ற நிதிபோன்றதென்றும், இதன் அருமை ஞானவெட்டியைப் பார்த்தால் நன்குவிளங்குமென்றும், இப்புத்தகம் விற்று அதனால்வரும் ஊதியத்தைக்கொண்டு பல வெளிவராத இதைப்போலொத்த அநேக கிரந்தங்கள் வெளியிடப்படும் என்றும் வரைந்துள்ளதைப் பார்வையிட்டேன். அன்றியும் இதற்குக் கிரயம் 2 ரூபா என்றும், சித்தர்பதிப்புக் கழகத்தில் சேர்ந்தவர்களுக்குப் பாதிவிலையென்றும், அவர்களால் பதிப்பித்தனவும், பதிப்பிக்கப்போவனவுமாகிய புத்தகங்களுக்கும் பாதிவிலையென்றும் எழுதி யிருந்ததைப் பார்வையிட்டேன். புஸ்தகம், 'யோகானந்தாஸ்ரமம், வண்ணாரப்பேட்டையில்' கிடைக்கும் என்ற விவரமும் அதிற் காணப்பட்டது.

(தொடரும்.) டாக்டர். மே. மாசிலாமணி முதலியார்.

---

## முக்கிய கவனிப்பு.

1. (F. M. S.) சிங்கப்பூர் பினங் மலாயா ஐக்கிய நாடுகளிலுள்ள நமது சந்தா நேயர்களின் சந்தா நெம்பர்கள் இம்மாதத்திலிருந்து (அதாவது 12-வது தொகுதி 11-வது சஞ்சிகையிலிருந்து) மாற்றப்பட்டிருக்கின்றன இதுமுதல் அதே நம்பர்கள் சரியாய் வரும். ஆதலின், இனி அவ்விடங்களிலுள்ள சந்தாநேயர்கள் அந்த நெம்பர்களையே கவனித்து நமக்கெழுதும் நிருப முதலியவற்றில் குறித்தெழுதக் கோருகிறோம். இவ்விடங்களுக்கு சி. ஒ. டி. (C. O D.) சிஸ்டம் பாக்கெட்டுகளுக்கு இல்லாததால் இத்தேசங்களின் சந்தாதாரர்கள், சந்தாத் தொகையை முன்பணமாகவே அனுப்பிவிடவேண்டும்.

2. சிலோன் போஸ்டல் ஆர்டர்கள் இங்கு மாறுவது கஷ்டமாதலின் அங்குள்ளவர்கள் பிரிட்டிஷ் போஸ்டல் ஆர்டராவது மணியார்டராவது அனுப்பவேண்டும்

பத்திராதிபர்.

# பெண்மக்களின் பரிதாபநிலை
# கல்கத்தாவில் கோர சம்பவம்

நேபாள தேசத்திலிருந்த நேபாள ஜாதியைச் சேர்ந்த இராஜகுமாரி என்னும் ஒரு பெண்ணை அவளுடைய பாட்டியார் வளர்க்கும்பொருட்டு, பாதம் பிரசாத் என்பாருக்குக் கொடுத்துவிட்டார். இவர் மேற்கூறிய பெண்ணைக் கல்கத்தாவில் பிரபல வியாபாரியாய் இருந்த ஹிராலால் ஹக்ரவாலா என்னும் ஒரு தனவந்தனுக்கு விற்றுவிட்டார். இவரும் இவருடையகூடா வொழுக்க நண்பர்களும் ஒன்றுசேர்ந்து இராஜகுமாரிக்கு வாயினால் சொல்லக்கூடாத அநேகவிதமான இடுக்கண்களை உண்டாக்கினார்கள். பின்னர் இராஜகுமாரி ஹிராலால் வீட்டினின்றுந் தப்பித்துக்கொண்டு வெளியே ஓடிவிட்டாள். நியாயம் பெறுவதற்காகப் போலீசாரின் உதவியை நாடினாள். ஆனால் போலீஸார் அவளுக்கு யாதொரு உதவியும் செய்யாமல் வாளாயிருந்துவிட்டார்கள். அவளது தேகம் மெலிவுற்றிருந்தது. அதற்குக் காரணம் ஹிராலாலும் அவருடைய நண்பர்களுமாவர். தேகம் மெலிவடைந்ததினால் இவள் பெண்மக்களுக்கென ஏற்படுத்தப்பட்டுள்ள ஒரு வைத்தியசாலையை நாட வேண்டியதாயிற்று. நேபாள ஜாதியைச் சேர்ந்தவரும் ஆங்கிலத்தில் பி. ஏ. பட்டதாரியுமான, கட்கா பகதூர் சிங் என்பவரின் செவிக்கு இப்பெண்ணின் பரிதாபமான நிலை எட்டியது. எட்டியதும், அவருடைய இரத்தம் கொதிக்க ஆரம்பித்தது. ஹிராலால், இராஜகுமாரி விஷயத்தில் நடந்து கொண்டமாதிரி தாமும் அவர் விஷயத்தில் நடந்துகொள்ளவேண்டுமென்று சிங் தீர்மானித்தார். இத் தீர்மானத்துடன் மேற்கூறிய சிங் ஹிராலாலின் காரியாலயத்திற்குச் சென்று தாம் கையில் கொண்டிருந்த ஒருவித ஆயுதத்தால் அவரை நையப் புடைத்தார். ஹிராலால் இறந்துவிட்டார். கட்கா பகதூர் சிங் கைதிசெய்யப்பட்டார். பின்னர், இவர், கல்கத்தா ஹைகோர்ட் நீதிபதி ஸ்ரீமான் கிரிகோரி முன்னிலையில் விசாரணைக் கனுப்பப்பட்டார். நீதிபதி சாட்சிகளை எல்லாம் விசாரித்தான பின்னர் சிங்கைப்பார்த்து 'நீர் ஏதாவது சொல்ல விரும்புகிறீரா' என்று கேட்டார். அதுகாலை ஸ்ரீமான் சிங் வாக்குமூலம் கொடுக்கத்தொடங்கி, "நான் கல்க்த்தாவைச் சேர்ந்த ஹிராலால் ஹக்ரவாலா என்னும் ஒருவனைக் கொலைசெய்தேன் என்று குற்றஞ்சாட்டப்பட்டு இவ்விடத்தில் கொண்டுவந்து நிறுத்தப்பட்டுள்ளேன். என்னுடைய 13-வது வயதிலேயே நான் முழுமையும் சாக உணவுகளை உட்கொள்பவனாக மாறிவிட்டேன். நான் எனது இளமைதொட்டு அஹிம்சா தருமத்தையே கைக்கொண்டு ஒழுகி வருகிறேன்; இன்னும் மகாத்மா காந்தியின் அஹிம்சா முறைகளின்படியும் நடந்து வருகிறேன்; இத்தகைய ஒருவன் கொலை செய்தான் என்பது ஆச்சரியகரமானதும் நம்பிக்கை யற்றதுமாகக் காணப்படும். இத்தகைய ஒருவன் இவ்வளவு சீக்கிரத்தில் அஹிம்சையை விட்டு விட்டு ஹிம்சையை ஏன் கைக்கொண்டான் என்பதற்குரிய காரணங்களை நீங்கள் அறிவீர்களானால் உங்களுக்கு இது ஆச்சரியமாகத் தென்படாது. காரணங்களைக் கூறுவதற்குமுன் என்னுடைய முன் நடவடிக்கைகளையும் இப்போதைய நடிவடிக்கைகளையும் எடுத்துக் கூற விரும்புகிறேன். ஐக்கிய மாகாணத்திலுள்ள டேராடூன் என்னும் நகரில் சிறப்புவாய்ந்த ஒரு கூர்க்கர் குடும்பத்தில் நான் பிறந்தேன். டேராடூன் கல்லூரியில் படித்து மெட்ரிக்

குலேஷன் பரீட்சையில் தேறினேன். பின்னர் டாக்கா சர்வகலாசாலையில் எப். ஏ. பட்டம் பெற்றேன். சென்ற ஆண்டில்தான் நான் பி. ஏ. பட்டதாரியானேன்.

இச்சம்பவம் நடைபெற்ற ஞான்று நான் கல்கத்தா கூர்க்க சங்கத்தின் ஆக்டிங் கௌரவ காரியதரிசியாய் இருந்தேன். தன்னுடைய தாய் உதித்த ஜாதியைச்சேர்ந்த கண்ணியவான்கள் ஒவ்வொருவரும் எங்ஙனம் அந்த ஜாதியின் விஷயமாய் நடந்துகொள்ளவேண்டுமென்பதை எடுத்துக்கூற இந்நிகழ்ச்சி ஒரு சந்தர்ப்பத்தை எனக்கு நல்கி இருக்கிறது.

## கோரமான நிகழ்ச்சி.

இராஜகுமாரியைப்பற்றிய விஷயங்கள் பத்திரிகைகளில் வெளியான போது என்னுடைய சங்கத்தார் அவ்விஷயமாய்த் தங்கள் கவனத்தைச் செலுத்தலானார்கள். நான் அச்சங்கத்தின் காரியதரிசியாய் இருந்தமையால் அதைப்பற்றி விசாரணை நடத்த ஆரம்பித்தேன். அப்பெண் இருக்கும் இடத்தைத் தேடிப்பிடித்து அவள் வாயாலேயே நாளாவர்த்தியில் விஷயங்களை அறிந்துகொண்டேன். அவள் கூறியவைகள் வெட்கத்தையும் அவமானத்தையும் இரத்தக்கொதிப்பையும் உண்டாக்கத்தக்கனவாயும், கோரமான காட்சிகளைத் தன்னகத்துக்கொண்டவைகளாகவும் இருந்தன. இப்பொழுதுகூட நான் அவ்விஷயங்களை இரவில் நினைத்துக்கொண்டாலும் திடுக்கிட்டுப் போகின்றேன். அவை ஆறாத கோபத்தையும் மூட்டி விடுகின்றன.

## பணக்காரரின் அக்கிரமம்.

நடந்த விஷயங்களின் ஒரு பகுதி மட்டும்தான் கோர்ட்டாரின் காதுக்கு எட்டியுள்ளது. மற்றவை எட்டவில்லை. நானும் மற்றவைகளைச் சொல்லப் போவதில்லை. கல்கத்தாவிலும் பிற இடங்களிலும் இருக்கும் தனவந்தர்களும் கண்ணியம் வாய்ந்தவர்கள் என்று கருதப்படுகிறவர்களுமே ஹிராலால் செய்துள்ள மிகவும் கேவலமான காரியத்துக்குப் பெருந்துணையாய் இருந்திருக்கிறார்களென்று நான் இப்போது கூறுகிறேன். பொதுஜனங்கள் இவ்விஷயத்தை அறிந்துகொள்வார்களாக. இதுகாலை தப்பித்துக்கொண்டோம் என்று அவர்கள் மகிழ்ச்சிகொள்ளாதிருக்கக் கடவர். ஒருகாலம் வரும். அப்போது அவர்களுடைய தீச்செயல்கள் எல்லாம் வெட்ட வெளிச்சமாய்ப் போய்விடும்.

## ஹிராலாலை அடித்ததற்குக் காரணம்.

ஹிராலாலை நான் அடித்தமைக்கான காரணங்களாவன:—

1. இராஜகுமாரியைப் பலாத்காரமாய் எடுத்துச்சென்று மானபங்கம் இழைத்தது. 2. இராஜகுமாரி தூரமான பாத்தியதையில் எனக்குச் சகோதரி முறையினளா யிருக்கிறாள்; நேபாளதேசத்தை ஆளும் ராஜ குடும்ப வம்சாவளியில் சேர்ந்தவளாயு மிருக்கிறாள். எனக்கு இருக்கப்பட்ட இராஜ விசுவாசத்தையும் இராஜபக்தியையும் ஜூரிகளாய் இருக்கப்பட்ட ஆங்கில கனவான்களாகிய நீங்கள் அறிந்துகொள்வீர்கள். 3 ஹிராலால் நேபாள ஸ்திரீகளை மிகவும் இழிவாகப் பேசி அவர்களுக்கு மானமும் கற்பும் இல்லையென்று வெளிப்படையாய்ச் சொல்லி வந்ததுடன் இராஜகுமாரி விபசாரி என்றும், தான் தன்னுடைய வேலைகளை யாருக்கும் அஞ்சாமல் செய்துவரப் போவதாகவும், நேபாள நாய்களின் கூச்சல்களுக்குத் தான் செவிசாய்க்கப் போவதில்லையென்றும் சொன்னது. தனக்கிருந்த பணக் கொழுப்பினால்

ஹிராலால் தப்பித்துக்கொள்ளலாம் என்று மனப்பால் குடித்துக்கொண்டு வந்தான். பணம் அநேகவிதமான பாபகாரியங்களை மறைத்துவைக்கக்கூடும். ஆனால் ஒருவனுடைய உயிரைக் காப்பாற்ற அதற்குச் சக்தி இல்லையென்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

நான் ஹிராலாலை அடித்ததற்கு இன்னொரு காரணம் என்னவென்றால், இராஜகுமாரியின் பரிதாபகரமான நிலையும் நோய்வாய்ப்பட்டு அவஸ்தைகள் அநுபவித்ததுமாகும். அவள் நோய்வாய்ப்பட்டு இருக்கும்போது நான் சில வேளைகளில் தனியாகவும் சில வேளைகளில் ஸ்ரீமான் கிரியுடனும் அவளுக்கு மருந்து கொடுப்பதற்காகவும் எங்களால் ஆன தேறுதல் வார்த்தைகளையும் உபசாரமான மொழிகளையும் சந்துஷ்டியான வார்த்தைகளையும் கூறுவதற்காகவும் ஆங்குச் செல்வது வழக்கம். அப்போது அவளின் பரிதாப நிலையை உணர்ந்தோம். மேற்கூறப்பட்ட காரணங்களைக் கொண்டுதான் நான் ஹிராலாலையடித்தேன். ஹிராலால் தன்னுடைய வாக்குமூலத்தில் நான் அவனிடமிருந்து லட்சம் ரூபாபெற முயன்றதாகவும், அவன் வீட்டுவழியாகச் சில மாதங்களுக்குமுன் யான் சென்றதாகவும் கூறினன். இவைகள் ஆதாரமற்றவை. என்மீது குற்றஞ் சுமத்தவே அவன் அங்ஙனம் கூறினன். அவனை இதற்குமுன் நான் பார்த்தது கிடையாது; அவனுடைய வீடும் எனக்குத் தெரியாது; அவனுடைய பேரும் தெரியாது. என்னுடைய கையால் அடிபட்டு மாண்ட அந்த தினத்தில்தான் (பிப்ரவரி௴ 26௳) நான் ஹிராலாலை முதலாகவும் கடைசியாகவும் கண்டேன்.

## சன்மார்க்கவழியில் இது சரியே.

மேற்கூறிய விஷயங்களையும் அவைபோன்ற இன்னும் பிற விஷயங்களையும் காதால் கேட்டும் கண்ணால் பார்த்தும் சும்மா இருந்துவிட எனக்கு இஷ்டமில்லாமல் போய்விட்டது. ஆகவே நான் ஹிராலால் விஷயமாய் அங்ஙனம் நடந்துகொண்டேன். இவ்விஷயமாய் நான் எங்ஙனம் நடந்துகொண்டேன் என்பதைத் தீர்மானிப்பது உங்களுடைய பொறுப்பாகும். நான் செய்த காரியம் சன்மார்க்கவழியில் முறைமையானதேயாகும். சட்டப்படியும் தவறாகாது. கெடுதல்களை அடக்குவதற்காகவும் கெடுதல் செய்கிறவர்களைத் தண்டிப்பதற்காகவும் பொதுஜனங்களையும் அவர்களுடைய சொத்துக்களையும் காப்பாற்றுவதற்காகவும் சட்டம் ஏற்பட்டுள்ளது என்ற என் அபிப்பிராயம் சரியானல் கெட்டவர்கள் தண்டிக்கப்படவேண்டும். மாதர்களின் கற்புக்குப் பங்கம் நேரிடாதவாறு பார்த்துக்கொள்ளவேண்டும். தீயர்களின் ஒன்றுபட்ட செயலும் நரசோரமும் அவை சம்பந்தமான பிற விஷயங்களும் ஜனங்களுக்கும் அரசாங்கத்தினருக்கும் தெரிந்திருக்கவேண்டும். சட்டத்தையும் அமைதியையும் உருவாகக்கொண்டுள்ள பிரிட்டிஷ் அரசாங்கம் தன் கண் எதிரிலேயே மேற்கூறப்பட்ட விஷயங்கள் நடப்பதற்காக வெட்கப்படவேண்டும்.

## தூக்குமரத்தில் ஏறத் தாயர்.

சட்டவழியிலும் சன்மார்க்க வழியிலும் நான் தவறு இழைக்கவில்லையென்றே கருதுகிறேன். நான் நேற்று ஹிராலாலை அடித்தேன் என்று கூறியதைப் பொலவே இன்றைக்கும் கூறுகிறேன். ஆனல் நான் தவறு செய்யவில்லையென்றே கூறுகிறேன். நீதிபதியும் ஜூரிகளும் என்னுடைய சகோதரியின் கற்பையும் கண்ணியத்தையும் காப்பாற்றுவது என் கடமையல்லவென்றும் என்னுடைய சகோதரிக்கு நேரிடும் இன்னல்களைப் பார்த்

துக்கொண்டு நான் சும்மா இருக்கவேண்டுமென்றும் ஹிராலாலேக்காட்டிலும் நான் ஜனசமூகத்துக்கு அதிகமான பாதகத்தை உண்டாக்கக்கூடியவன் என்றும் கருதினாலும் அவைகளுக்கானவற்றை நான் ஏற்றுக்கொள்ளத் தயாராய் இருக்கிறேன். இதற்காக எவ்வளவு அதிகமான தண்டனை விதிக்கலாமோ அவ்வளவு தண்டனையும் விதிக்கக் கேட்டுக்கொள்கிறேன். தூக்குமரத்தில் ஏறி மேல் உலகத்திலுள்ள பரம்பொருளின் முன்னிலையில் நின்று ஸ்திரீகளின் கற்பைக் காக்கவும், ஸ்திரீகள் நலம் பெறவும் ஆண்மக்கள் வீரம் பெறவும் ஸ்திரீகள் சக்தியின் அம்சமென்று அவர்களைக்கண்டு கொடுங்கோலர்கள் அஞ்சி மரியாதை செய்யவும் மன்றுடும் நாள்தான் நன்னாளாகும்" என்று கூறி முடித்தார்.

நீதிபதி ஜூரிகளுக்கு வழக்கின் சாராம்சத்தை எடுத்துரைத்தார். ஜூரிகள், சிங் கொலை செய்யவில்லை ன்று ஏகமனதாய்ச் சொன்னார்கள். ஆனால் அறுவர் சிங் கொலை ஏற்படக்கூடிய காயத்தை உண்டாக்கினார் என்றும் மூவர் அங்ஙனம் இல்லையென்றும் கூறினார்கள். பரிதாபமான காயத்தைச் சிங் உண்டாக்கினார் என்று ஜூரிகள் அனைவரும் ஏகமனதாய்ச் சொன்னார்கள். இதற்குமேல் நீதிபதி சிங் என்பவருக்கு எட்டுவருடக் கடுங்காவல் தண்டனை விதித்தார். "மாடர்ன் ரெவ்யூ"

(குறிப்பு.) வட இந்தியாவில் அடிக்கடி இத்தகைய அபலைகளான ஸ்திரீகள் துன்மார்க்கர்களால் எடுத்துச் செல்லப்பட்டு காமதுரந்தரர்களான சில தனவந்தர்களுக்கு விற்கப்பட்டு வருகிறார்கள். இதைக்கேட்க எந்த இந்தியனுடைய உள்ளம்தான் கொதிப்புறாம லிருக்கும்? இராஜகுமாரி என்ற நேபாளதேசத்து மாதராள் பட்ட கஷ்டங்களை நினைக்க நினைக்க எவன் மனம்தான் புண்படாது. இராஜகுமாரியைத் துன்பப் படுகுழியினின்று மீட்ட கட்கா பகதூர் சிங் சாதாரண மனிதரல்ல. அவர் ஆங்கிலத்தில் பி. ஏ. பட்டதாரியாய் இருப்பதுடன்கூட கல்கத்தா கூர்க்கசங்கத்தின் கௌரவ காரியதரிசியாயு மிருந்திருக்கிறார். அவர் தம் பேருக்கேற்ப நீதியை நிறுத்த வீரத்துடன் நடந்துகொண்டார் என்பது வெள்ளிடைமலை. அவர்பெயர்ப் பொருளாவது: "கட்கா-கைவாள், பகதூர் சிங்-ஆண்சிங்கம் அதாவது கையில் வீரவாள் ஏந்திய ஆண்சிங்கம்" என்பதாம். இத்தகைய புண்ணிய புருஷருக்கு கல்கத்தா உயர்தரமன்ற நீதிபதி கனம் கிரிகோரி துரையவர்கள் எட்டுவருடக் கடுங்காவல் தண்டனை விதித்தது சட்டப்படி நியாயமானதே. எனினும் அவரை விடுதலை செய்திருந்தால் அது பலராலும் கொண்டாடத் தக்கதாயிருக்கும். இதைப்பற்றிப் பற்பல இடங்களில் ஜனங்கள் கூட்டங்கூடி ஸ்ரீமான் சிங்குக்கு ஏற்பட்ட தண்டனையை ரத்துசெய்ய மன்னர்பிரான் மன்னிப்பைப்பெற, பெரு முயற்சிசெய்து வருகிறார்கள். இம்முயற்சி பயன்படுமானால் ஆட்சியாளர்க்கு அதிகச் சிறப்புண்டு. அநீதியில் நடப்போரை அதிகாரவர்க்கத்தினர் மூலம் தண்டிக்கச் செய்வது பகீரதப் பிரயத்தனமாய் முடியாத வேலையாயிருக்கின்றது; அதனை யொடுக்க நேரில் முயற்சி செய்வார்க்கு மட்டும் விரைவாகவும் எளிதாகவும் தண்டனை கிடைத்து விடுகிறது. இது காலக் கொடுமையென்றே சொல்லவேண்டும். இந்த ஹிராலாலைப்போன்ற பணக்கொழுப்பேறியவர்களின் அக்கிரமம் எங்கும் அதிகரித்து வருகின்றது. அதைப்பற்றிப் பேசுவதும் குற்றமென்று இக்காலத்தில் சில கூட்டத்தாரால் கருதப்படுகின்றது. ஆதலின் இவ்வகை அக்கிரமங்களைக் கடவுளே தீர்த்தருளவேண்டும். ப-ர்.



# வைணவம்

## ஸ்ரீ ஆண்டாள்.

(455-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஸ்ரீ ஆண்டாளுக்குக் குழந்தைப் பருவந்தொடங்கியே யெம்பெருமான் பக்கல் வளர்ந்த காதற் பெருக்கு, அவளுடைய கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியும் ஐம்புலன்களையும் எம்பெருமானிடத்திற் சேரச் செய்தது. ஆண்டாளைச் சூழ்ந்த எப்பொருளிலும் அவள் மனஞ் செல்லாததாய் எல்லாம் வல்ல திருமருவு மார்பனைக் காணும் வேட்கையிலேயே தங்குவதாயிற்று. ஆண்டாள் தன்னிடத்து எழுந்த வேட்கையால் அவனுடைய கலியாண குணங்களிலும், கார்த்தண் முகிலும் காயாவும் கருவிளையும் காட்டும் அவனுடைய திருமேனியின் வடிவழகிலும் ஈடுபட்டவளாய், அவன்சீர் பேசி அனுபவானந்தம் கொள்ளத் தொடங்கினாள்.

இவ்வகையில் மனத்திலே திருமாலையே காணும் வேட்கையுடையளாகி ஆண்டாள் நின்ற நிலைமையினை மற்றைத் தோழிமார்கள் கண்டு, சிலர் ஆண்டாளைச் சேர்ந்து ஓரினத்தாராகவும், மற்றும் சிலர் சேர்ந்து ஓரினத்தாராகவும் தம்முள் இருதிறத்தவராகி ஆண்டாளின் எண்ணத்தைப் பூர்த்தி செய்வாராயினர்.

ஆண்டாள், தன்னினத்தைச் சேர்ந்தவரும் பிறரும் கேட்க, ஸ்ரீ கிருஷ்ணன் ருக்மிணி நங்கையை மணந்த வரலாறு சொல்லிப் பாட விரும்பினள். ஸ்ரீ ஆண்டாள் எல்லாரையும் நோக்கி "கேட்பீராக! நான் ஸ்ரீ கண்ணன் வன்மையைப் பேசுகிறேன். 'சிசுபாலன் ருக்மிணிப்பிராட்டியாரை மணக்கப் போகின்றான்' என்றவார்த்தை நாடெங்கும் பரவியது. சிசுபாலனும் தனக்குப் பேரின்பமாவது அத்திருமணமே எனத் துணிந்தவனாய், மணம் பூணுதலிலே மையல்கொண்டவனாய், பின் நிகழப்போகும் விளைவறியாதவனாயினான். அவன், தான் தேடின பொருளையெல்லாம் ஸ்ரீ ருக்மிணிப் பிராட்டியாரை மணக்கும் சம்பந்தமாகச் செலவிட்டான். 'பிராட்டியாரைக் கைப்பிடிக்க (பாணிக்கிரஹணம் செய்யப்)ப் போகிறோம்' என்று எக்களித்தான்; அண்ணாந்த தலையுடையனாயினான்.

இவன் நிலைமை இங்ஙனமிருப்ப ருக்மிணிப் பிராட்டியாரின் உள்ளத் திருந்ததை நீங்களறியச் சொல்லுகிறேன் அறியுங்கள்: சிசுபாலனுக்கென்று காப்புக்கட்டின பிராட்டியார் 'சிசுபாலன் என்னைவந்து தீண்டும்போது என் பிராணன் போகவேண்டும்' என்றும், இல்லையாகில் 'ஸ்ரீ கிருஷ்ணன் என்னை அங்கீகரிக்கவேண்டும்' என்றும் தைவத்தை வேண்டியிருந்தாள். சாக்ஷாத் தைவ ஸப்தவாச்யனான ஸ்ரீ கிருஷ்ணன் பிராட்டியின் எண்ணமறிந்து அவளை அங்கீகரிக்கத் திருவுள்ளம் பற்றியருளினான். அவன், ஸ்ரீ பாஞ்ச ஜன்ய வாழ்வானை வாயிடை மடுத்தூதி அச் சங்கொலி செவிப்பட்டுத் தரிக்கும்படி செய்து ஸ்ரீ ருக்மிணிப் பிராட்டியாருக்குத் தன் வரவை யறிவித்து, மணப்

பந்தரிலிருந்த ராஜஸமூஹமும் சிசுபாலனும் வெட்கி முகவொளிகெட, ஆங்கு அவளை விருப்புற்றுப் பாணிக்கிரஹணம் செய்து தேரிலே யெடுத்து வைத்துக்கொண்டு பெரிய இரைச்சலோடே யெழுந்தருளினன். அதுகாலை ருக்மிணிப் பிராட்டியின் தமையனை ருக்மன் 'இப்படிச் செய்வதென்' என்று எதிர்த்து அவளை மீட்பான் கருதி ஸ்ரீ கண்ணன் முன் நின்று பகைத் தான். கண்ணன் 'இவனைக் கொல்லின் ருக்மிணிப் பிராட்டியாரின் மனம் வருந்தும்' என்று அவனைப் பிடித்துத் தேர்க்காலோடேகட்டி அவனுடைய வீரத்துக்குப் பங்கமாக அவன் தலையை அம்பாலே சிரைத்துவிட்டான். அண் ணாந்திருந்த சிசுபாலன், எவர் முகத்தையும் பார்க்கவும் லஜ்ஜைகொண்டு அண்ணாந்தவனாகவே யானன். இங்ஙனம் ஸ்ரீ ருக்குமிணிப்பிராட்டியாரை மணக்கும் பெருமையை யுடையவனாய் ஸ்ரீ தேவகி வயிற்றில் பிறந்தவனும் பகைவர்களை யொழிப்பதில் சிங்கமாவானுமாகிய, பெரும்பேறு பெற்று வளர்த்த அசோதை யிளஞ்சிங்கத்தைப் பாடுவோம்'' என்று அவன் பெருமை யினைப் பேசிப் பாடுவாளாயினள். தோழியர் பலரும், வினயமுடன் ஸ்ரீ கண் ணன் பெருமைகளையெல்லாம் கேட்டவர்களாய் ஸ்ரீ ஆண்டாளுடன்,

" கண்ணாலங் கோடித்துக் கன்னிதன்னைக் கைப்பிடிப்பான்
திண்ணார்ந் திருந்த சிசுபாலன் தேசழிந்து
அண்ணாந் திருக்கவே யாங்கவளைக் கைப்பிடித்த
பெண்ணாளன் பேணுமூர் பேரும் அரங்கமே'' (நாச்-11-திரு-9-பா.)

என்று புகழ்ந்தும்,

" உருப்பிணி நங்கையைத் தேரேற்றிக் கொண்டு
விருப்புற் றங்கேக விரைந்தெதிர் வந்து
செருக்குற்றான் வீரஞ் சிதையத் தலையைச்
சிரைத்திட்டான் வன்மையைப் பாடிப்பற
தேவகி சிங்கத்தைப் பாடிப்பற'' (பெரி-திரு-3-ப-9தி-3-பா.)

என்று உந்திபறந்தும் களித்தார்கள். ஸ்ரீ ருக்மிணிப் பிராட்டியாரின் திரு மணம் பேசிக்களித்த ஆண்டாள், வடபெருங் கோயிலுடையானைக் காணும் வேட்கைகொண்டு தன்னைச் சூழவிருந்த தன் பாங்கிகளை அவனிருக்குமிடத் தைத் தனக்கு அறிவிக்குமாறு, கேட்கத்தொடங்கி,

"தோழிகாள்! சொல்வேன். அறிந்து உணர்த்துமின். மத்தளவு தயி ரும், மடவார்கள் கடைந்து உறிமேல் வைத்த வெண்ணெயும் வாரி விழுங் கிய மதுரை மன்னனைக் கண்டவருளரோ?'' என்று வினவினள்.

**தோழியருள் ஒருத்தி:**—"வறண்டு வளர்ந்து நரம்பும் எலும்பும் தோன்றும் படியான பொல்லாத வடிவினையுடைய பேய்ச்சியானவள், கம்சனால் அனுப்பப்பட்டவளாய், தன் வடிவை மறைத்து, யசோதைப் பிராட் டியோ டொத்த வடிவைக்கொண்டு, நஞ்சுகலந்த பாலை ஸ்ரீ கண்ண னுக்கு ஊட்டக்கண்டவருளர்'' என்றனள்.

பேயென்றும், பொல்லா வடிவுடையாளென்றும் நஞ்சுகூட்டிய பாலை ஊட்டினள் என்றும் அவள் சொல்லக்கேட்ட, ஆண்டாள், அவன்பாற் சென்ற காதலுள்ளத்தால் தன்னை மறந்தாளாய்த் தரையிற் சாய்ந்தனள். அவள் மனமறிந்தாளாகிய தோழியொருத்தி அவளுக்கு நேர்ந்த மனக்கலக் கத்தைப் போக்குமுபாய மறிந்து,

"எங்கள் தலைவியே! பூதனை முடிந்தவரலாறு அறிந்திலையே, வஞ்ச மனத்தினளாய் வந்த பேய்ச்சியின் நினைப்பை எங்கும் பரந்துள கண்ணன்

அறியானோ? கண்ணனும், தான் அவள் எண்ணம் அறியான்போன்று நடித்து, பால்வேண்டினான் போன்று ஆவலுடன் பருகுவானாய் அவள்தன் ஆவியையே பருகிப் போகவிட்டான்'' என்றாள்.

ஆண்டாள், தன் அன்பு படர்தற்குக் காரணமான கொள்கொம்பு போல்வான் வீரம் கேட்டதும் தன் மயக்கம் தீர்ந்து தளிர்த்த முகத்துடன் விளங்கினாள்.

ஆண்டாளின் முகம், மாமணிவண்ணன்றன் சீர்குறித்து மலர்தலையும், அவனுக்கு வருந் துன்பங்கேட்டவளவில் வாடுதலையுங்கண்ட தோழிமார் ஆண்டாளுக்கு அவள் கேட்டுச் சந்தோஷிக்கவல்ல அவனின் பெருமைகளையே சொல்லி வந்தார்கள். அவனைக் காணுதலாகிய வேட்கைக் கடலில் ஆழ்ந்த ஆண்டாள் அவ்வேட்கையே காரணமாக உடல் மெலியத் தலைப்பட்டாள்.

(தொடரும்.) **N. திருவேங்கடத்தையங்கார்.**





## வேதாந்த சாரசங்கிரக வசனம்

(458-ம் பக்கத் தொடர்ச்சி.)

மோக்ஷத்தை யடைவதற்கு முக்கிய சாதனமாயிருப்பது மனோ சாந்தியேயாம். சகல கேவல (நினைப்பு மறப்பு) வடிவமனமே சகல பந்தங்களுக்கும், அப்படியே மோக்ஷத்திற்கும் காரணமாம். சுத்த மனம் முத்திக்கும் அசுத்தமனம் நரகத்திற்கும் ஏதுவாகும்.

"இறப்பும் பிறப்பும் பொருந்த—எனக்
கெவ்வண்ணம் வந்ததென் றெண்ணியான் பார்க்கில்
மறப்பும் நினைப்புமாய் வந்த—வஞ்ச
மாயா மனத்தால் வளர்ந்தது தோழீ!"

என்றார் ஞானச் செல்வராகிய தாயுமானவர்.

மனோசுத்த முடையோரே முத்தியடைவர் என்பது எல்லா மதத்தினர்க்கும் ஒப்ப முடிந்தவிஷயம். ஆலயவழிபாடு, தியானாதி யோகங்கள் யாவும் மனத்தை யடக்குதற்கேற்ற சாதனங்களே. மனத்தை யடக்கியவனே மகா யோகியாவான். இதுவே செயற்கரிய காரியம். இச்செயற்கரிய காரியத்தைச் செய்தோரே பெரியோர். இதுபற்றியே திருவள்ளுவனாரும்,

"செயற்கரிய செய்வார் பெரியர்; சிறியர்
செயற்கரிய செய்கலா தார்."

என்றார்.

எவனொருவன் இம்மனத்தைத் தன்வசப்படுத்திக்கொண்டவனோ அவன் மோக்ஷவாயிலை யடைந்தவனாவன்.

"நின்னை யறப்பெறு கிற்கிலேன் நன்னெஞ்சே
பின்னையான் யாரைப் பெறுகிற்பேன்—நின்னை
அறப்பெறு கிற்பேனேல் பெற்றேன்மற் றீண்டு
துறக்கந் திறப்பதோர் தாள்"

என்னும் ஆன்றோர் வாக்கும் ஈண்டு அறிதற்பாலதாம்.

ஆனால், இஃது எளிதிற் கைகூடுங் காரியமல்ல. 'சிந்தையை யடக்கியே சும்மாவிருக்கின்ற திறமரிது' எனத் தாயுமானவரே கூறி யிருப்பாராயின் சொல்லவேண்டுவது வேறு யாதுளது! இம்மனத்தின் தன்மையை யுணராத வர்கள் மனம்போன போக்கெல்லாம் போய்க்கொண்டே 'அதென்ன! நாம் சொன்னபடி, போவென்றால் போகின்றது, நில் என்றால் நிற்கிறது; இது பெரிய காரியமா' எனக் குழறுவர். இவர்கள் உண்மையில் தாம் வேறு மனம் வேறு என்பதையே அறியாதவராவர்.

நீண்டகால அப்பியாசத்தால்தான் மனோ வடக்க முண்டாம். இது கைகூடாதவரையில் வேறெவ்வகை முயற்சியும் பயன்படாது.

"சினமிறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே."

என்றார் தாயுமானார்.

விஷயாதிகளிற் சென்றுழலும் மனம் அவ்வா றலையாமல் அடங்கவேண்டு மாயின் முதலில் அது பரிசுத்தப்படவேண்டும். பரிசுத்த மடைந்த மனமே சாந்த நிலையை யெய்தப் பெறுவதாகும்.

ஆகலின் மனம் பரிசுத்த மடைதற்கேற்ற சாதனங்களை யீண்டுக் கூறு கின்றார்.)

எந்தச் சாதனங்க ளுண்டாயிருத்தலால் மனம் பரிசுத்த மடையுமோ, எந்தச் சாதனங்களில்லாவிட்டால் பரிசுத்த மடைவதில்லையோ அத்தகைய சாதனங்கள் கூறப்படுகின்றன.

பிரம்மசரியம் - அஹிம்சை - ஜீவகாருண்யம் - கபடமின்மை-விஷயங்களி னிடத்து ஆசை யில்லாமையென்னும் வைராக்கியம் - பரிசுத்தம் - இடம்ப மின்மை - சத்தியம் - எனது என்னும் பாவமில்லாம லிருத்தலாகிய மமகார மின்மை-நிச்சலத்தன்மை-அபிமானமின்மை-ஈசுவரத்தியானவாஞ்சை- ஞானி களின் கூட்டுறவு-ஞானசாஸ்திரங்களினிடத்து ஆசக்தியுடையவர்களா யிருத் தல்-சுக துக்கங்களைச் சமமாகப் பாவித்தல்-கௌரவம் விரும்பாமை-ஏகாந்த வாசம் - மோக்ஷவாஞ்சை என்னும் இப்பதினெட்டுக் குணங்களும் (தர்மங் களும்) எவனிடத்திருக்குமோ அவனுக்கு மனமானது நிர்மலமாகும். இத் தர்மங்களில்லாதவன் வேறுவகையான கோடி தர்மங்களை யுடையவனாயி னும் மனம் பரிசுத்தமாதலில்லை. (இப்பதினெட்டுத் தர்மங்களையும் தனித் தனி விவரிக்கின்றார்.)

**பிரம்மசரியம்:**—ஸ்திரீ சங்கமத்தைப்பற்றி நினைத்தலும்-ஸ்திரீகளைப் பார்த்த லும்-அவர்களுடைய குணங்களையும் காரியங்களையும் குறித்துப் புகழ்ந்து பேசுதலும்-அவர்கள் அழகாயிருக்கின்றார்களென்றெண்ணுதலும்-ஆசை கொள்ளுதலும்-சம்பாஷித்தலும்-அவர்களுடன் தனித்திருத்தலும்-கூடு தலும் என்னும் இவ்வெட்டுச் சங்கமங்களும் இல்லாதிருத்தலே பிரம்ம சரியமாகும். இது சித்த சுத்தியைத் தருவதாம். (பிரம்மசரிய விரதம் புருஷர்க்கு மட்டுமன்று, ஸ்திரீகளுக்கு முரியதாம். மேல் விவரிக்கப் பட்டுள்ளவை புருஷர்க்காகக் கூறப்பட்டிருப்பினும் உபலக்ஷணத்தால் மாதர்க்கும் கொள்ளற் பாலனவாம். அவ்வாறு கொள்ளுங்கால் ஸ்திரீ

கள் புருஷசங்கமத்தை நினைத்தலும்-அவர்களைப் பார்த்தலும்-அழகாயிருக்கின்றன ரென்றெண்ணுதலும் என்றிப்படி அவ்வெட்டையும் மாற்றிக்கொள்க. உபலக்ஷணமாவது:-'ஒருமொழி தன்னினத்தைத் தழுவுதல்' (உ-ம்) விஷமுண்டவன் சாவான் என்ருல் விஷமுண்டவள் சாவாள்-விஷமுண்டவர் சாவார்-விஷமுண்டது சாகும் என்பதுபோல.)

**அஹிம்ஸை:**—மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் எந்தப் பிராணிக்கும் இம்சை செய்யாதிருத்தல்.

**ஜீவகாருண்யம்** (பூததயை):—ஒருவன் தன்னிடத்தில் எவ்வளவு கருணையுடையவனுயிருக்கிருனே அப்படியே மற்றப் பிராணிகளிடத்திலும் கருணையுடையவனுயிருத்தல்.

**கபடமின்மை:**—எண்ணுவதொன்று - பேசுவதொன்று - செய்வதொன்றுமாயிராமல் மனம் வாக்குக் காயமென்னும் முக்கரணங்களும் ஒரே தன்மையாயிருத்தல்.

**வைராக்கியம்:**—பிரம்மாமுதல் தாவரமீருகவுள்ள ஒவ்வொரு விஷயத்தையும் காக்கைமலம் போலக் கருதி வெறுத்தல்.

**பரிசுத்தம்:**—இது வெளிச் சுத்தம் உள் சுத்தமென இருவகையாம். மண்ணுலும் ஜலத்தாலும் செய்யப்படும் சரீர சம்பந்தமான சுத்தம் வெளிச் சுத்தமாம். அஞ்ஞானத்தை யொழித்தல் மனேசம்பந்தமான உள் சுத்தமெனப் படும். உள் சுத்தம் நன்ருகச் செய்யப்பட்டால் வெளிச் சுத்தம் அவசியமில்லை. (உள் சுத்தமில்லாமல் வெளிச் சுத்தமாகிய சரீர சுத்தம் மட்டுமிருந்தால் பிரயோசனப்படாது. அப்பியாசிகள் இரண்டையும் உடையராயிருத்தல் அவசியம். ஆனுல் சரீராபிமான மற்ற ஞானிகள் வெளிச்சுத்தமின்றி யிருப்பர். அவர்களுக்கு அது அவசியமுமன்று.)

**இடம்பமின்மை:**—தியானம் பூஜை முதலானவற்றினிடத்து உண்மையான பக்தியில்லாமல் பிறர் புகழும்படியாக அவர்களெதிரில் செய்தலும், ஒருவருமில்லாத காலத்தில் அத்தியயன பூசாதிகளைச் செய்யா தொழிதலும் இடம்பமாம். அவ்வாறு பிறர் புகழ்ச்சிக்காகச் செய்யாது நிஜபக்தியோடு செய்தல் வேண்டும். இதுவே இடம்பமின்மையாம்.

**சத்தியம்:**—தான் நன்ருய்ப் பார்த்ததும் கேட்டதுமான விஷயத்தையே சொல்லுதலும் பிரஹ்மம் ஒன்றே சத்தியம் எனச்சொல்லுதலும் சத்தியமெனப்படும். (பார்த்ததைப் பார்த்தபடியும் கேட்டதைக் கேட்டபடியும் உள்ளது உள்ளவாறே சொல்லுதலே சத்தியமாயினும், பிறர்க்கு நேர்ந்த ஆபத்து நீங்கி மேன்மை யுண்டாவதற்காகச் சொல்லும் பொய்யும் சத்தியமேயாம். ஆனுல் இப்பொய்யினுல் ஒருவனுக்கும் யாதொரு விதமான ஆபத்து முண்டாகலாகாது. இது குற்ற மற்ற நன்மை தருவதாயிருத்தல் வேண்டும். இதையே தமிழ் மறையும் 'பொய்ம்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த-நன்மை பயக்குமெனின்' என விதித்தது. பிறிதோருயிர்க்குத் தீமை யுண்டாக்காத சொற்களைச் சொல்லுதலே சத்தியமாம்.)

**மமகாரமின்மை:**—தன்னுடையவை யல்லாத தேகம் மனைவி முதலானவற்றைத் தன்னுடையவை யென்றெண்ணும் எண்ணம் மமகாரமாம். அவ்வெண்ணத்தை விடுதலே மமகாரமில்லாமையாம். இதனுல் மனிதன் முத்தியை யடைகின்றுன்.

(தொடரும்.) **பூ. ஸ்ரீநிவாசன்**, தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.




## கற்பு நிலைமை.

**"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்**
**திண்மையுண் டாகப் பெறின்"**

1. என்னும் குறளில் ஒருவன் பெறுதற்குரிய பொருள்களுள் மனையாளினும் உயர்வாகிய பொருள் யாதிருக்கின்றது? அவளிடத்தே கற்பென்னும் கலங்கா நிலைமை இருக்கப்பெற்றால் என்று திருவள்ளுவநாயனார் திருவுளம் பற்றினமையால் உலகத்தில் பெண்களாய்ப் பிறந்தவர்கள் தமக்குரிய நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்னும் நால்வகைக் குணங்களும் ஏதுவாக, மனதைப் பல விடத்திலும் செல்லவிடாது நிறுத்திக் கற்பு நிலை கெடா திருக்கவேண்டும்.

2. அந் நாற்குணங்களில் நாண மென்பது சங்கோசம்; மடமென்பது எல்லாம் அறிந்தும் அறியாததுபோல் இருத்தல்; அச்சமென்பது காணாததைக் கண்டவிடத் தஞ்சுதல், பயிர்ப்பென்பது கணவரல்லாதவர் கை மேற்படின் அருவருத்தலாம். விவாகம் இல்லாமல் கன்னிகையாக இருக்கும் பருவத்தில் தாய் தந்தையர் ஆதீனத்திலும், விவாகமான பின் கணவர் ஆதீனத்திலும், கணவற்குப் பிற்காலம் புத்திரர் ஆதீனத்திலும், புத்திரர் இல்லாவிட்டால் சகோதரர் ஆதீனத்திலும் இருக்கவேண்டுமே அல்லாமல் ஒருபோதும் பெண்கள் சுவாதீனப்பட்டு இருக்கலாகாது.

3. கொண்ட கொழுநனை மேன்மையாகப் பாவித்து, அவன் சொல்லைத் தடுக்காமல் அவனுக்குக் கீழமைந்து, பக்தி விநயத்துடனே, "பொய் சொன்ன வாய்க்குப் போஜனம் கிடையாது" என்பதனாற் பொய் பேசாமல் கறந்தபால் கறந்தபடி அவன விஷயத்தில் உண்மையாய் ஊசியும் சரடும் போல் மனைவி அவன் கருத்தின் வழி ஒழுகல் வேண்டும்.

4. பெண்ணைக் கட்டிக்கொடுக்கும் பொழுது பிதா வித்தியா சாதுரியமுள்ளவனுக்குக் கொடுக்கவேண்டுமென்றும், தாயானவள் மகள் ஐசுவரியவானுக்கு வாழ்க்கைப்படவேண்டுமென்றும், சுற்றத்தார் நல்ல குலஸ்தன் வந்து வாய்க்கவேண்டுமென்றும், அந்தப் பெண் அழகிற் சிறந்தவனை நாம் வரிக்கவேண்டும் என்றும் நினைக்கிறதுண்டு; ஆயினும் அது அப்படியேவாய்க்குமா? தெய்வச் செயலின்படி அல்லவோ சம்பவிக்கும்.

5. "குலமகட் கழகு தன் கொழுநனைப் பேணுதல்" என்பதனால் தன் புருஷன் அழகிருந்த ஊரில் குடியிருந்தறியாத குரூபியா யிருந்தாலும் அவனை நவ மன்மதனாகவும், என்றும் அசாத்திய ரோகமுடையவனா யிருந்தாலும் அரோக திடகாத்திரனாகவும், "அவன் தம்பி நான்தான், எனக்கொன்றும் வராது" என்றவனைப்போல் வயிற்றைக் கிழித்துப் பார்த்தால் வாரடையுங் கிடையாத நிரட்சர குட்சியா யிருந்தாலும் கல்விக் களஞ்சியமாகவும்,

பாண்டவர்களை நானறியேனு, கட்டிற் கால்போல மூன்று பெயரென்று வாயினுற் சொல்லி, இரண்டு விரல்காட்டி, ஒருகோடு நிலத்தில் கிழித்தவ னுக்குக் குறைந்தவனு நான் என்றெண்ணும்படி, கணக்கறியாத நிர்மூடனு யிருந்தாலும் சேஷசாயிபோல நிபுணனுகவும், உண்ணச் சோற்றுக்கும் கட் டக் கந்தைக்கும் கதியற்று, அடுப்பிற் பூனை தூங்க, கையில் அரைக்காசுக் கும் வழியில்லாத அஷ்டதரித்திரனுக இருந்தாலும் குபேர சம்பத்து உடை யவனுகவும், கொக்குப்போல நரைத்துக் கண்குழிந்து பல் விழுந்து வில்லைப் போல் வளைந்த முதுகுடைய கிழவனுயிருந்தாலும், நல்ல யவ்வனமுடைய விடனைப்போலவும் பாவனைசெய்து அவனை அவமதியாமல் அனவரதம் பேணி நடக்கவேண்டும். கல்லென்ருலும் கணவன் புல்லென்ருலும் புருஷன் என்றல்லவா உலகம் சொல்லுகின்றது.

6. மனைவியானவள் கணவனுக்குத் தாதிபோலப் பாத பணிவிடை செய்பவளும், மந்திரிபோலச் சமயோசித மறிந்து நல்லாலோசனை சொல் பவளும், ஸ்ரீ மகாலட்சுமிபோலப் பெண்ணைப் பெண் இச்சிக்கத்தக்க அதிரூப சௌந்தரியவதியாயும், பூமாதேவியைப்போல சலியாத பொறுமையுடைய வளாயும், வேசியைப்போலப் பர்த்தாவைச் சரசகேளி விநோதத்தால் பிரியப் படுத்துகிறவளாயு மிருப்பதுடன் அன்போடு தாய்போல இனிய உணவு களாற் போஷிக்கின்றவளாயு மிருக்கவேண்டும். "தாய்க்குப்பின் தாரம்" என்று உலகம் சொல்லுகின்றதல்லவா?

7. "வல்லிடிவழக்கைச் சொல்லடி மாமி" என்று மாமியுடனே வாதுசெய்யாமல், அவளைத் தாய்போலக்கருதி அவள் காலிலே பட்டது தன் கண்ணிலே பட்டதாகக் குடும்ப பாரத்தையெல்லாம் ஏந்திக்கொண்டு, மாமியாரும் "கண்மணியாகிய என் செல்வமருமகளைப்போலத் தேடினுலும் கிடைக்குமா?" என்று சொல்லும்படி நடந்து "மாமியார் மெச்சிய மரு மகள் இல்லை" என்னும் பழமொழியைப் பொய்யாக்கவேண்டும். இவள் எங் களுக்கு மருமகளா ! அல்ல, எங்கள் குலதெய்வமே இப்படி உருக்கொண்டு வந்ததென்று மகிழும்படி மாமனுரைத் தந்தையைப்போலப் பூசிக்கவேண்டும்.

8. கணவனுடைய சகோதரர்களைப் பேதமாய் எண்ணுமல் பரிபாலிப் பதனுல் அவர்களில் மூத்தவர்கள் இவள்தான் எங்கள் சகோதரியென்றும், இளையவர்கள் எங்களைப்பெற்ற தாயென்றும் கொண்டாடும்படி நடக்க வேண்டும்.

9. நாத்தன்மார்களையும் வரிசை வண்மை தவருமல் அவர்கள் இந்தப் பாக்கியவதிபோலப் பெண்கள் எங்கும் காணக் கிடையார்களென்று சொல் லும்படி நன்ருய் உபசரிக்கவேண்டும்.

10. அடிக்கடி அண்டைவீடு அயல் வீட்டிற்குப் போகலாகாது. எவ் விடத்திற்காவது யாதொரு நிமித்தத்தால் அவசியம் போகவேண்டியிருந்தால் சிறிய பெண்குழந்தையையாயினும் வழித்துணையாகக் கூட்டிக்கொண்டு போகவேண்டுமே அல்லது தனிவழி நடந்து தண்டுமாரியாய்த் திரியலாகாது.

11. "ஒருபெண் பேசினுல் பூமி அதிரும்;
இரண்டுபெண் பேசினுல் நக்ஷத்திரம் உதிரும்;
மூன்றுபெண் பேசினுல் கடல் சுவறும்;
நான்குபெண் பேசினுல் உலகம் யாதாகுமோ?"

என்பதனுல் யாருடனும் இடி இடித்ததுபோல் உரக்கப்பேசாமல் குயில் கூவு

தல்போல் இனிய குரலாய்க் கிளி கொஞ்சுவதுபோல் மிருது பாஷியாய் வசனிக்கவேண்டும். "பெண்கள் இருப்பிடம் பெரிய சண்டை" என்கிறார்களே.

12. "தாயைப் பார்த்துப் பெண்ணைக் கொள்" என்பதை நினையாமல் நான் வீணே பிண்டமும் துண்டமும் சேர்ந்ததுபோல் "பிடாரியைப் பெண்ணென்று பிடித்துப் பேயனானேனே! இதுவும் என் தலைவிதியா!" என்று புருஷன் விசனப்படாதபடி, "பழம் நழுவிப் பாலிலே விழுந்தது போலவும்" "சர்க்கரைப் பந்தலிலே தேன்மாரி பொழிந்ததுபோலவும்," ஏதோ பாக்கியவசத்தால் என தில்வாழ்க்கைக்கு நல்ல பெண் வாய்த்தாளென்று மன மகிழும்படி இங்கிதமறிந்து நடக்கவேண்டும். பெண்களின் கற்புநிலைமைக்கு ஓர் அறிகுறியானது இவ்வியாசம்.

S. நாசிம்மம்.

குறிப்பு:—விநோதரச மஞ்சரியிலுள்ள பெண்களின் கற்புநிலைமையைத் தழுவி இவ்வியாசம் நமது நண்பரால் எழுதப்பெற்றது. ப-ர்.

## அறிஞரின் அமுதமொழிகள்.

(472-ம் பக்கத் தொடர்ச்சி.)

75. Every tree bears its fruit; we reap only that which we have sown *Napoleon.*

ஒவ்வொரு மரமும் தன் இயற்கைக்குரிய பழத்தையே கொடுக்கிறது. நாம் எந்த வித்தை விதைக்கிறோமோ அதன் பலனையே அறுவடை செய்கிறோம். (இவற்றைப்போலவே மனிதன் தன் செய்கைக்குரிய பயனை அனுபவிக்கிறான்) (நெப்போலியன்)

76. Pride goeth before destruction, and an haughty spirit before a fall *Bible.*

(கேடுவரும் பின்னே மதிகெட்டுவரும் முன்னே என்பதைப்போல்) கெடுதல் சம்பவிக்குமுன் கர்வம் அதற்கடையாளமாக முன் வந்து நிற்கும். ஒருவனுடைய வீழ்ச்சிக்குமுன் 'நான் எனது' என்ற அகங்கார மமகாராதிகள் முன்வந்து நிற்கும்.(பைபிள்)

77. And he that does one fault at first,
And lies to hide it, makes it two *Isaac Watts.*

('ஒரு பொய்யை மறைக்க ஒன்பது பொய்' என்பதைப்போல்) ஒரு தவறான காரியத்தைச்செய்து அதை மறைக்க முற்படுவது இரண்டு தவறுகள் இழைத்தலுக்கு ஒப்பாம். (ஐஸாக் வாட்ஸ்)

78. There is a tide in the affairs of men,
Which taken at the flood, leads on to fortune
Omitted all the voyages of their life
Is bound in shallows, and in miseries

*Shakespeare.*

மனிதனுடைய வாழ்க்கையாகிய (சம்ஸார) கடலில் (விவேகமாகிய) அலையிருக்கிறது; அந்தக் கடலில் அகப்பட்ட மனிதன் அவ் அலையைப்பற்றினால் (அதனால் முக்தியாகிய கரை சேர்க்கப்பட்டு) பேரின்பத்தை யடைவான். அதைப்பற்றாதவன் அக்கடலிலேயே உழன்று துன்படுவன். (ஷேக்ஸ்பியர்)

79. For solitude sometimes is best society,
And short retirement urges sweet return

*Milton.*

ஏகாந்தமே நல்ல கூட்டுறவு. கொஞ்சநேரமாவது தனித்திருப்பது மேலான இன்பத்தைத் தரும். (மில்டன்)

'இனிது இனிது ஏகாந்தம் இனிது'—(ஔவை.)

80. A day, an hour, of virtuous liberty
Is worth a whole eternity in bondage

*Addison.*

ஆயுட்காலமெல்லாம் அடிமைவாழ்வில் கழிப்பதைக்காட்டிலும் சுதந்திரத்துடன் குறைந்தது ஒருநாள் அல்லது ஒருமணி நேரமாவது வாழ்வதுமேல். (அடீசன்)

.81. Words are like leaves; and where they most abound,
Much fruit of sense beneath is rarely found

*Pope.*

வார்த்தைகள் மரத்தின் இலைகளுக்குச் சமானமா யிருக்கின்றன. அவைகள் எங்கு மிகுந்திருக்கின்றனவோ அங்கு அறிவு என்னும் பழம் அவைகளுக்கிடையில் தென்படுவது மிகவும் அருமை. (அதாவது இலைகளடர்ந்தவிடத்தில் பழம் தோற்றுவது அருமை: பேச்சு அதிகமாயிருக்கிறவிடத்தில் அறிவு விளக்கமாவது அருமை) (போப்)

82. Think not a trifle, though it small appear,
Small sands the mountain, moments make the year,
And trifles life

*Young.*

எவ்வளவு சிறியனவற்றையும் அற்பம் அற்பம் என்று எண்ணாதே. சிறுமணலும் நாளாவர்த்தியில் பெருமலையாகும். விநாடிகள் பெருகியே ஆண்டுகளாகின்றன. சிறு முயற்சிகளும் பெரும் வாழ்க்கைக்கு ஏதுவாகும். (யங்)

(தொடரும்.) A. P. இராமன், B. A.

ஆங்கில மகாகவி ஷேக்ஸ்பிய ரியற்றிய
வெனிஸ் வர்த்தகன் என்னும் நாடகத்திலுள்ள

# இரக்கத்தின் சிறப்பு.

The quality of mercy is not strain'd ;
It droppeth as the gentle rain from heaven
Upon the place beneath ; it is twice bless'd ;
It blesseth him that gives and him that takes :
'Tis mightiest in the mightiest ; it becomes
The throned monarch better than his crown ;
His sceptre shows the force of temporal power,
The attribute to awe and majesty,
Wherein doth sit the dread and fear of kings ;
But mercy is above this scepter'd sway,—
It is enthroned in the heart of kings,
It is an attribute to God himself ;
And earthly power doth then show likest God's
When mercy seasons justice.

*(The Merchant of Venice)*

---

(தமிழ் மொழி பெயர்ப்பு)

இரக்கம் என்னும் உருக்கம் பொருந்திய
நல்ல குணத்தைச் சொல்லக் கேளும்
இயற்கையா லதுவந் தெய்துவ தல்லது
செயற்கையால் வந்து சேருவ தன்று
வானத் திருந்து வையகத் திறங்கும்
மெல்லிய மழைபோல் வெளிப்படுந் தகையது
செய்பவன் தன்னைச் செவ்விதி லேற்பவன்
மெய்யுற விரும்பும் மேன்மை வாய்ந்தது
தன்னைத் தருபவன் றனக்குந் தன்னைக்
கொள்பவன் றனக்குங் குதூகலந் தருவது
பெரிய பொருள்களுள் பெரியதாய் நிற்பது
சக்கர வர்த்தியர் தமக்குயர் வளிக்கும்
திருமுடி யதனிலுஞ் சிறந்து திகழ்வது
இம்மைக் குரியதாய் இயங்கு மகித்திய
வல்லமை யுடனே அச்சம் மாட்சிமை
மனத்திகில் இதர மன்னவர் தம்பயம்
என்னு மிவற்றை எடுத்துக் காட்டும்
செங்கோல் மன்னவன் செழுங்கையில் திகழ்வது;
இந்த ஆட்சியினும் இனிய இரக்கமோ
மேன்மை யுள்ளது; வேந்தர் மனத்தில்
ஆட்சி பரிவது; அனைத்தும் அளிக்கும்
கடவுள் தனையே யொத்தகாட் சியது
இரக்க மதனை யெய்திய நீதி
தன்னொடு செலுத்தும் தன்மையுள் ளாரே
பூமியின் மீது புகழ்பெறுங் கடவுளின்
சக்தியைக் காட்டித் தழைத்திடு வோரே.

ம. இராஜகோபால பிள்ளை.

# பிரபஞ்ச அனுபவம்.

(474-ம் பக்கத் தொடர்ச்சி.)

***

பெற்றோர்களிடத்தில் நற்குண நற்செய்கைகள் இல்லாதவரையில், அவர்கள் தங்கள் குழந்தைகளை எவ்வளவுதான் திருத்தி வந்தாலும், அக் குழந்தைகள் ஒருபோதும் திருந்தமாட்டார்கள். ஏனெனில் பழக்க வழக்கங்கள் மிகமிகக் கொடியன; அதோடு சிறு பிள்ளைகளுக்குத் தமது வீடே பெரிய பாடசாலையாகும். ஆதலால் நாம் முதலில், நம்மைத் திருத்திக்கொண்டால், பிறகு நம் குழந்தைகளைத் திருத்தவேண்டிய வேலையே இல்லாமற் போய்விடும்!

***

மேல் நாடுகளிலெல்லாம் குழந்தைகளை வளர்க்கும் தாய்மார்கள் வீர புருஷர்களுடைய சரித்திரங்களையும் பராக்கிரமங்களையுங் கூறி "நீயும் அவ் விதம் செய்வாயா?" என்று குழந்தைகளைக்கேட்டு "செய்வேன்" என்று சொல்லச்செய்து, மகிழ்ந்து, விளையாடி, வளர்த்து வருகின்றனர். ஆனால் நம்நாட்டுப் பெண்மணிகளோ, குழந்தைகளைத் தொட்டிலில் வைத்தாட்டும் பொழுதே "உஸ், உங்ஞாவ், காட்டுப்பூனை வருகிறது, பூச்சாண்டி வருகிறான், மூன்று கண்ணன் வருகிறான்" என்று கூறிப் பயப்படுத்தி, அக்குழந்தைகளின் வீரத்தை யொடுக்கி, பயங்காளிகளாகச்செய்து வளர்க்கின்றார்கள். கோணவாவு எடுக்கவும், சோப்பிட்டுக் குளிக்கவும், மஸ்லீன் உடையுடுத்தவும் கற்றுக் கொள்வதில் உள்ளவிருப்பம் குழந்தைகளை வளர்க்கும் விஷயத்தில் இல்லையாம்! நாம் என்னசெய்வது?

***

கார்பொரேஷனுக்கும், முனிசிபாலிட்டிகளுக்கும் வரிப்பணம் வாங்குவதிலும், ஜப்திசெய்வதிலும், கதவைப்பிடுங்குவதிலும் உள்ள சுறுசுறுப்பு, ரோட்டுகளிலுள்ள மேடுபள்ளங்களிலும், சந்துபொந்துகளிலுள்ள சாக்கடைத் தண்ணீரிலும் செல்லாதாம்! காரணம் கேட்டால், கமிட்டி சாங்ஷன் கிடையாதாம்! வரிக்கோ வென்றால் அது முன்னமேயே சட்டமாய் விட்டதாம்! 'சுயராஜ்யம் வந்த பிறகு நம்மவர்கள் இந்தியாவை எப்படி ஆளப்போகிறார்கள்' என்பதை முனிசிபாலிடிகள்தாம் முதன் முதலில் மக்களுக்கு அறிவிக்கக் கிளம்பியிருக்கின்றனவாம்! குறைவென்ன?

***

"ஏன் இவ்வளவு கவலையோடு எல்லோரும் அழுகிறார்கள்; இறந்துபோன பிணத்திற்கு இனிச்சாகப்போகிற பிணங்கள் இவ்வாறு புலம்புவானேன்?" என்று ஒரு சன்னியாசி மிக்க கவலைப்பட்டு அழுகிறவர்களுக்கு ஆறுதல் சொல்வதற்காக ஒரு வீட்டில் நுழைந்தாராம். அதே நிமிடத்தில் இறந்தவருடைய மனைவி "நான் எவ்வளவு நேரமாய் அழுகிறேன்; எந்தச் சிறுக்கியாவது 'ஒய்ந்தழுகு' என்று கூறினளா?" என்று மற்றவர்களைப் பார்த்துச் சண்டையிட்டாளாம்; உள்நுழைந்த சன்னியாசிக்கு அங்கென்னவேலை!

**கி. ஆ. பெ. விசுவநாத பிள்ளை**, *திருச்சிராப்பள்ளி.*

---




இப்போது புதிய முறைப்படி பற்பலர் சங்கீதம் பாடி வருவதில், சுருதி, லயம், இராகம் முதலியவை பொருந்தாவிட்டாலும் குரல் மாத்திரம் காதுக்கு இனிமையா யிருந்தால் போதும் என்று, நவீன நாகரிக சங்கீத சங்கத்தார் தீர்மானித்து அவ்வாறு இனிய குரலெடுத்துப் பாடுவதற்குச் சில குண்டுக் கழுதைகளைக் கண்டுபிடித்துக் கொண்டுவந்திருக்கிறார்களாம். அவற்றிற்கு நல்ல தீனிகொடுத்தும் அவை பாடுதற்கு வாயைத் திறவாம லிருக்கின்றன வாம். அதற்காக அவர்கள் விசனித்து புரொபஸர் ஒருவரிடம் யோசனை கேட்டதில் அவர், கட்டெறும்புகளைப் பிடித்துக் கழுதைகளின் காதில் கடிக்கவிட்டாலும், தேளைப் பிடித்துக் கொட்டவிட்டாலும் அந்தக் குண்டுக் கழுதைகள் கண்டத்தொனியிட்டுச் சண்டப்பிரசண்டமாகப் பாடும் என்று ஓர் உபாயஞ் சொன்னாராம். அவர்கள் அவ்வாறே செய்ததில் பாட்டுக் கச்சேரிகள் திருப்தியாக நடைபெற்று வருகின்றனவாம்.

* * * *

எப்பொழுதும் தங்கள் கட்டளைப்படி நடந்துவந்த ஆசைநாயகரிடம் உள்ளவற்றையெல்லாம் சுருட்டிக்கொண்டு ஓடிவிடும் அலங்காரப் பெண் மணிகளின் தயவை எப்படிப் பெறலாம் என்று ஒரு சுகவாசி தம் நண்பரைக் கேட்டதில், அவர், "தினந்தோறும் அவ்வுத்தமிகளிடம் சென்று சாஷ்டாங்க மாக வீழ்ந்து நமஸ்கரித்து அவர்கள் திட்டுவதையும், கையில் அகப்பட்டவற்றால் புடைப்பதையும் பெற்றுக்கொண்டு வந்துவிடுவதே மீண்டும் அவர்கள் நேயம் பெறுவதற்குச் சுலபமான மார்க்கம்" என்று கூறினாராம்.

* * * *

உலகத்தில் அழையா விருந்தினர் சிலர் இருக்கின்றனர். இவர்கள், ஊரில் நடக்கும் பல கலியாணங்களில் (அக்கலியாணங்களுக்குரியவர்கள் தங்களுக்குத் தெரியாதவர்களாயிருந்தாலும்) பந்திவைக்கும்போது அலங்கார மாகப்போய் உட்கார்ந்துகொள்கிறார்கள். இவர்களை, பெண்வீட்டார் மாப்பிள்ளை வீட்டுக்காரர்களென்று நினைத்துக்கொள்கிறார்கள்; மாப்பிள்ளை வீட்டார் பெண்வீட்டுக்காரர்களென்று நினைத்துக்கொள்கின்றனர். மற்றவர்களுக்குக் கிடைப்பதுபோலவே இவர்களுக்கும் வடை பாயசத்தோடு சாப்பாடு நடக்கிறது. இப்படியே இவர்கள் பெரும்பான்மையும் நல்ல சாப்பாடு சாப்பிட்டுக் காலங் கழிக்கின்றனர்.

* * * *

எவரிடத்திலாவது நல்லவார்த்தை சொல்லி, செய்யுளாலோ, வசனத்தாலோ ஒருநூல் எழுதுவித்துவாங்கித் தங்கள் பெயரால் அச்சிட்டுக் கொள்பவர்கள் பெரும்புலவர் பதவியைக் கஷ்டமின்றி அடைந்து எவரிடத்திலும் நன்மதிப்புப் பெறலாமென்று போலிப்புலவர் சங்கத்தார், படிப்பில்லாமல் புலவராதற்கு ஓர் உபாயங்கண்டிருக்கிறார்களாம்.




# அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(477-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஆனந்தஸிங்கும் மனோகரனும் பவானியும் அங்கே போய்ச்சேர்ந்தார்கள். ஆனந்தஸிங் அவர்களிருவரையும் முன்னேயிருந்த ஒரு அறையில் மறைந்திருக்கச்செய்து "நான் சமிக்கை செய்கிறவரையில் நீங்கள் வெளியில் வரவேண்டாம், பத்திரம்" என்று கூறிவிட்டுச் சென்றான். அரைமணிநேரங் கழித்து அம்பாலிகையும் அமிர்தம்மாளும் வந்தார்கள்.

ஆனந்தஸிங் அவர்களை யழைத்துக்கொண்டு கறுப்பண்ணன் இருக்கும் இடத்திற்குச் சென்றான். அவன் முன்னாடியே கறுப்பண்ணனுக்கு எல்லாச் சங்கதியுங் கூறியிருந்தான். அவனும் மனம் விட்டு நடந்த சங்கதிகள் யாவும் கூறி விடுவதாய்ச் சம்மதித்திருந்தான்.

ஆகையால் அவன் ஆதிமுதல் அந்தம்வரையில் நடந்த சங்கதிகள் யாவும் ஒன்று விடாமல் கூறினான். மாதரிருவரும் கண்ணீர் விட்டுக்கொண்டே யாவும் கேட்டார்கள். யாவற்றையும் கூறி முடித்ததே கறுப்பண்ணன் அறையைவிட்டு வெளியிற் சென்றான்.

அதன்பின் ஆனந்தஸிங் "பவானியையும் மனோகரனையும் வரும்படி யழைக்க அவர்களும் மற்றவர்களோடு வந்து கூடினார்கள். காதலர்கள் இருவரும் சந்தித்தபோது அவர்களுக் குண்டாகிய சந்தோஷத்தையும், பவானி தன் புத்திரியைப்போல் பாவித்திருந்த அம்பாலிகை, இறந்தவர்களோடு ஒன்றாய் மதிக்கப்பட்டவள், மறுபடி தன்னிடம் பூரண சுகத்தோடு வந்து சேர்ந்ததால் அவளுக்குண்டான சந்தோஷத்தையும், அம்பாலிகை தான் எவ்வளவோ அன்போடு காதலித்திருந்த மனோகரனே தன்னைக்கொல்ல முயன்றானென்று நம்பிக்கொண்டு சொல்லொணா மனத்துயரை யனுபவித்துக்கொண் டிருந்தவள் இப்போது அவன் பூரண நிரபராதி யென்றும் தன் மேல் அவன் வைத்திருந்த காதல் எள்ளளவேனும் குறையவில்லை யென்றும் தெரிந்தபோது எல்லாத்துயரமும் கனவாய்ப்போக இப்போது அவள் அடைந்த சந்தோஷத்தையும் நாம் விவரித்துக் கூறுவதெனின் சாத்தியமானதல்ல. ஆகையால் இதை வாசிக்கும் நண்பர்களே அச்சந்தோஷத்தை ஊகித்துக் கொள்ளுமாறு வேண்டிக்கொள்ளுகிறோம்.

பவானி எழுந்து நின்று யாவரையும் நோக்கி "நான் கூறும் இரண்டொருமொழிகளை நீங்கள் கேட்டுக்கொண்டால்தான் நமது சந்தோஷம் பூரணமானதாகும். இப்போது நாமனைவரும் அடைந்திருக்கும் சந்தோஷத்திற்குக் காரணமும், நாம் அனுபவித்துக் கொண்டிருந்த நரகவேதனையாகிய துயரம் முழுமையும் அடியோடொழிந்ததற்குக் காரணமும், தீரவானும் சத்தியவானும் உத்தமனுமாகிய இந்த மகா புருடனே யாகும்" என்று ஆனந்தஸிங்கைச் சுட்டிக் காட்டிவிட்டு, "இத்தனைபேருக்கும் நன்மை செய்வதற்கு இவர் பட்ட கஷ்டங்களையும், இவர் சிக்கிக்கொண்ட பிராணபத்துகளையும் விவரவமாய்க் கூறினால் இச்சமயம் நெடுநேரமாகுமாதலால் சுருக்க

மாய்க் கூறுகிறேன் என்று ஆரம்பித்து, இடையிடையில் ஆனந்தலிங் போதும் போதும் என்று எவ்வளவு தடுத்தும் நிறுத்தாமல், அவன் பட்ட கஷ்டங்களையும் பன்முறை பிராணபயத்தில் சிக்கியதையும் யாவும் ஆதியோடந்தம் வரையில் கூறினாள்.

அதன் பிறகு அம்பாலிகை யெழுந்து நின்று மிக்க அன்போடும் வியப்போடும் ஆனந்தலிங்குக்குத் தன் நன்றியை வெளியிட்டாள். மறுநாள் மெய்யான மரணசாசனம் வெளிக்குக் கொண்டு வரப்பட்டது. அதன்படி ஆஸ்தி முழுமையும் அம்பாலிகையின் பெயருக்கே சாசுவதமாய் மாற்றப்பட்டது.

இப்போது கறுப்பண்ணனையும் மலையாளத்தானையும் லாயரையும்—இம் மூவரையும் நியாயப்படி கைது செய்து தண்டனையடையச் செய்யலாம். ஆனால் ஆனந்தலிங்குக்கும் மற்றவர்களுக்கும் அப்படிச்செய்யப் பிரியமில்லை. ஆனந்தலிங் முன்னமே லாயர் உண்மை கூறித் தனக்கு உதவியாயிருந்தால் அவரை மன்னித்து விடுவதாய் வாக்களித்து விட்டிருக்கிறான். கறுப்பண்ணன் இருபத்தையாயிரம் பெற்றுக்கொண்டு உடனே நாட்டைவிட்டுப் போய் விடுவதாயின் அவனையும் மன்னித்து விடுவதாய் வாக்களித்திருக்கிறான். இக்காரணங்களோடு இன்னொரு முக்கிய காரணமிருக்கிறது. அதாவது கறுப்பண்ணன் அம்பாலிகைக்கு நெருங்கிய பந்துவாகையால் அவனைத் தண்டனை யடையச்செய்தால் குடும்பத்திற்கே அவமானம் நேரிடுவதோடு நடந்தசங்கதிகள் யாவும் பகிரங்கத்திற்கு வந்து அகௌரவத்தை யுண்டாக்கும்.

இக்காரணங்களால் முன் ஏற்பாட்டின் படிக்கே கறுப்பண்ணன் பணத்தைப் பெற்றுக்கொண்டு மலையாளியைக்கூட அழைத்துக்கொண்டு அன்றே நாட்டை விட்டுத் தூரதேசம் போய் விட்டான்.

லாயர் அது முதல் ஆனந்தலிங்கின் நண்பனாகவேயிருந்து, துர் நடக்கைகளை விட்டுவிட்டு யோக்கியனாய் வாழ்ந்து வந்தான். இச்சம்பவங்கள் நடந்த ஒரு மாதம் கழித்து அம்பாலிகைக்கும் மனோகரனுக்கும் மிக்க ஆடம்பரத்தோடு திருமணம் முடிந்தது. பவானி தன் மரணகாலமட்டும் அவர்களிடமேயிருந்து அவர்களுடைய மக்களுக்குச் செவிலித்தாயாய்ச் சுகத்தோடிருந்தாள்.

அக்கலியாணம் நிறைவேறியதும் ஆனந்தலிங் அமிர்தம்மாளைத் தனியே யழைத்துத் தன் சரித்திரத்தைக் கூறித் தான் அவளை மணம் புரிந்துகொள்ள விரும்புவதாய் வெளியிட்டான். அமிர்தம்மாளுக்கு முன்னமே யவன் நாட்டம் தெரிந்திருந்ததோடு தனக்கும் அது சம்மதமே யாதலால் சந்தோஷத்தோடு இருவரும் ஆலிங்கனம் செய்து கொண்டார்கள்.

அடுத்தவாரம் அவர்கள் கலியாணம் நிறைவேறியது. ஆனந்தலிங்குக்கு முன்னமே யிருந்த கொஞ்சம் சொத்தோடு இப்போது மனைவியின் திரண்ட ஆஸ்தியும் கிடைத்ததேனும் தேச நன்மைக்காக அவன் தன் தொழிலை விடாமலே புத்திரபாக்கியம் முதலிய எல்லாச் செல்வத்தோடும் மனமொத்த மனைவியோடும் சுகமாய் வாழ்ந்துகொண் டிருந்தான்.

கறுப்பண்ணனும் ஆனந்தலிங்கைப் போலவே சற்றேறக்குறைய தைரியமும் வீரமும் சாமார்த்தியமும் துணிகரமும் தந்திரமு முடையவனே யெனினும், இருவரும் அச்சாமார்த்தியங்களை யுபயோகித்தவழிகளின் வித்தியாசத்தால் ஒருவருக்கொருவர் நேர்மாறான பலனை யடைந்தார்களென்பது சிந்திக்கத்தக்கது.

ஆரணி-குப்புசாமி முதலியார்.

முற்றிற்று.



# வர்த்தமானப்பகுதி

**பிரம்மாண்டமான உடும்பு வகைகள்:**—சமீபத்தில் உலகம் முழுமையும் சுற்றிவந்த சர்ஆலன் காப்ஹாம் என்பவர், தம்முடைய சுற்றுப் பிரயாணத்தின்போது கோமோடோ என்னும் சிறிய தீவொன்றில், புராண இதிகாசங்களில் கூறப்பட்டிருத்தலையொத்த மூன்று பிரம்மாண்டமான உடும்புகளைக் கண்டார். அவைகளின் நீளம் பத்தடிமுதல் இருபதடிவரை இருந்தது. அவை தம்முடைய நகங்களைக் கொண்டு குதிரைகளைப்போலொத்த மிருகங்களையும் பிடித்துக்கொன்று விழுங்கக்கூடிய சக்தியைப் பெற்றிருக்கின்றன. அவை தம்முடைய வால்களைக்கொண்டு பிராணிகளைத் தாக்குகின்றன. அந்த வாலினால், ஓர் அடி ஒரு மனிதன்மீது விழுந்தால் அவன் கட்டாயம் நொறுங்கி விடுவான். ஓடும் சக்தியும் அவைகளுக்கு அதிகம். மட்டக்குதிரைகளையும் அவை கொன்றிருக்கின்றனவென்று சர்ஆலன் அத்தீவின் ஜனங்களிடமிருந்து தெரிந்துகொண்டார். இறந்துபோன காட்டுப்பன்றிகள் விஷயமாகவும் அவை ஒன்றுக்கொன்று சண்டையிட்டுக்கொண்டனவென்றும் அறியலானார். இத்தகைய உடும்புகளில் இரண்டு சமீபத்தில் அமெரிக்காவுக்கு எடுத்துச் செல்லப்பட்டன. இவைகளில் ஒன்று அமெரிக்கா போனவுடன் இறந்துவிட்டது. இவைகளைக் கண்டுபிடித்திருப்பதனால் பிராணிசாஸ்திரத்திலேயே ஒருவித முக்கிய சம்பவம் நேர்ந்துள்ளது. நகரும் ஜந்துக்களில் இவை மிகவும் பெரியவை. இவைகளின் ஆதி உடும்பு 4000 ஆண்டுகளுக்கு முன் இருந்திருக்கவேண்டுமென்று நம்பப்படுகிறது.

*  *  *  *

**110 அடுக்குள்ள கட்டிடம்:**—ஜனநெருக்கம் அதிகமுள்ள அமெரிக்க நகரங்கள் இனி கணக்கற்ற அடுக்குகளைக்கொண்ட கட்டிடங்களைப் பெறுவதிலிருந்து நீங்கவேண்டுமென்றும், அதற்கு மாறாக ஜனங்கள் அத்தகைய கட்டிடங்களைக் கட்டிக்கொண்டு போவார்களானால் அவர்களுக்குக் கேடு சம்பவிப்பது உண்மை என்றும் எ. எடிசன் என்பவர் சிலவாரங்களுக்கு முன் ஓர் எச்சரிக்கை செய்தார். இதைப்பற்றி அமெரிக்கா முழுமையும் சாதகமாகவும் பாதகமாகவும் அபிப்பிராயங்களைக் கூறி வந்தது.

எடிசன், எச்சரிக்கைசெய்த அத்தினத்திலேயே நியூயார்க் நகரில், 110 அடுக்குகளைக்கொண்ட ஒரு கட்டிடத்தை எழுப்புவதற்கான பிளான்கள் எல்லாம் தயாரிக்கப்பட்டுவிட்டன என்ற ஒரு விளம்பரம் வெளிவந்தது. இக்கட்டிடம் உலகத்திலுள்ள கட்டிடங்களைக் காட்டிலும் அதிக உயரமானதாய் இருக்கும். ஆகாயத்தை அளாவி நிற்கத்தக்க இக்கட்டிடத்தின் பெயர் லோர்கின் கோபுரம். இக்கட்டிடம் தரைமட்டத்திற்கு 1208 அடி உயரம் இருக்கும்; கடைக்காலுடன் சேர்ந்து இக்கட்டிடம் கால் மைல் உயரம் கொண்டிருக்கும். இக்கட்டிடத்துக்கு எண்பது லட்சம் கற்கள் வேண்டும்: 40,000 டன் நிறையுள்ள இரும்புச்சாமான்கள் தேவை. 50, 000 சதுர அடி கொண்ட நிலத்தில் இக்கட்டிடம் எழுப்பப்படும். இதைக் கட்டி முடிக்க 12, 500, 000 டாலர் செலவாகும்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**பிரபவ௵ ஆனி௴—கலியுகாதி 5029, சாலிவாகனம் 1850,**
**பசலி 1336—கொல்லமாண்டு 1102—ஹிஜரி 1345,**
**இங்கிலீஷ் 1927௵ ஜூன்௴—ஜூலை௴**

| ஆனி௴ | ஜூன்௴ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 15 | புத | பௌ20-8 | கேட்17-38 | சி17-38ம | கரிநாள், ஷடசீதி புண்ய காலம், குளம் வெட்ட |
| 2 | 16 | வியா | பிர19-50 | மூல19-10 | சித்60 | ஜேஷ்டபகுளம் |
| 3 | 17 | வெ | துதி18-23 | பூரா19-35 | பி19-35சி | வியாதியஸ்தர் குளிக்க |
| 4 | 18 | சனி | திரி15-58 | உத்18-58 | சித்60 | தானியம் செலவிட |
| 5 | 19 | ஞா | சது12-33 | திரு17-23 | அ17-23ம | காதுகுத்த, வாகனமேற |
| 6 | 20 | திங் | பஞ்8-23 | அவி15-10 | சித்60 | கரிநாள் |
| 7 | 21 | செ | சஷ்3-35<br>சப்58-15 | சதை12-13 | மர60 | அவமாகம்<br>[யனம் 54-18. |
| 8 | 22 | புத | அ52-35 | பூரட்8-43 | அ8-43சி | திரிலோசனபூஜை, கடகா |
| 9 | 23 | வியா | நவ46-35 | உத்4-58 | சித்60 | அவமாகம், சுபமுகூர்த்தம் |
| 10 | 24 | வெ | தச40-30 | ரேவ0-55<br>அஸ்56-48 | அமி60 | சர்வமுகூர்த்தம், நிஷேகம் உபநயனம் செய்ய |
| 11 | 25 | சனி | ஏகா34-33 | பர51-55 | சி51-55அ | சர்வ, மத்வ, ஏகாதசி |
| 12 | 26 | ஞா | து28-48 | கி✕49-20 | சித்60 | கிருத்திகை, பிரதோஷம் |
| 13 | 27 | திங் | திர23-35 | ரோ46-23 | அமி60 | மாசசிவராத்திரி |
| 14 | 28 | செவ் | ச●19-13 | மிரு44-13 | சி44-13ம | சர்வத்திர அமாவாசை |
| 15 | 29 | புத | அ15-33 | திரு43-3 | சித்60 | |
| 16 | 30 | வியா | பிர13-20 | புன43-8 | அமி60 | |
| 17 | 1 | வெ | துதி12-23 | பூசம்44-43 | மர60 | |
| 18 | 2 | சனி | திரி12-45 | ஆயி47-45 | ம47-45அ | |
| 19 | 3 | ஞா | சது14 45 | மக52-10 | ம52-10சி | |
| 20 | 4 | திங் | பஞ்18-15 | பூர58-0 | சித்60 | |
| 21 | ஜூலை௴ 5 | செவ் | சஷ்22-58 | உத்60 | அமி60 | |
| 22 | 6 | புத | சப்28-23 | உத்4-45 | அ4 45ம | |
| 23 | 7 | வியா | அ34-15 | அஸ்12-0 | சித்60 | |
| 24 | 8 | வெ | நவ39-45 | சித்19-10 | சித்60 | |
| 25 | 9 | சனி | தச44-35 | சுவா25-48 | அ25-48சி | லக்ஷ்மி விரதாரம்பம், சாகவிரதாரம்பம் |
| 26 | 10 | ஞா | ஏகா48-15 | விசா31-20 | மர60 | சயன ஏகாதசி |
| 27 | 11 | திங் | து50-25 | அனு35-33 | சித்60 | சாதுர்மாஸவிரதாரம்பம் |
| 28 | 12 | செவ் | திர50-53 | கேட்38-8 | ம38-8அ | குளம் கிணறு வெட்ட |
| 29 | 13 | புத | சது49-50 | மூல39-13 | ம49-50அ | பவித்ரோபணம் |
| 30 | 14 | வியா | ○47-28 | பூரா39-48 | சித்60 | பௌர்ணமி, அவமாகம் |
| 31 | 15 | வெ | பிர43-35 | உத்-37-3 | சி37-3ம | ஆஷாடபகுளம் |

| | | | |
|---|---|---|---|
| குரு | | | சூ-ரா<br>புத |
| | 6-கட-புத<br>16சிம்ம-சுக்<br>29-சிம்-செவ் | | செவ்<br>சுக் |
| | | | |
| கே | சனி | | |

**PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,**
**AT THE "ANANDA BODHINI" POWER PRESS,**
**15, VENKATESA MAISTRY ST., MADRAS.**